# புத்துயிரளித்தல்.

---



திவான் பகதூர்
R. சுப்பையா நாயுடு
இயற்றியது

அ. ஸ்ரீநிவாஸாச்சாரியார், பி. ஏ., எல். டி.,
மொழி பெயர்த்தது



இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்
மதுரை :: :: சென்னை
பதிப்புரிமை] 1939 [விலை அணு 8

# முகவுரை

---

"பூமலி துயர்முறை இதைமுழு துணர
ஊழோடு நீயும் நானும் சூழின்
இதைத்துக ளாக்கி இதய விழைவினை
அணுகுமோர் புத்துரு அமைக்க மாட்டோமோ?"

—ஓமார்காயம்

3567

இந்நூல் 1935ம் ஆண்டில் ஜப்பானிலிருந்து நான் திரும்பும் போதும், இங்குவந்து சேர்ந்தவுடனேயும் எழுதப்பட்டது. எழுதியதை விஷய வாரியாக ஆக்கும் பொருட்டு நான் அதைச் சீர்திருத்தம் செய்யவோ அழகு படுத்தவோ இல்லை. முதல் முதலாக ஒருவரது மனதிற் பதிகின்றவைகளிலும், உண்டாகும் நினைவுகளிலும் ஒரு விதப்புதுமை மணம் உண்டு என்பதும், அவைகளைப் பின்னர்ப் பிரிக்கவோ பண்படுத்தவோ முயலும்போது அந்நறுமணம் மறைந்து விடுகிறது என்பதும் எனது நம்பிக்கை.

இந்நூலிற்கு அளித்துள்ள பெயரிலும், அத்தியாயங் களின்தலைப்புகளிலும்சில கருத்துக்கள் அடங்கியுள்ளன; அவையாவன:—ஒழுங்காக நன்கமைக்கப்பட்ட வாழ்க்கை யாகிய பண்டைய நிலையொன்று,பொறுக்க முடியாதபடியும் உருத்தெரியாதபடியும் அது சீர்கேடடைந்த பிந்திய நிலை யொன்று, மறுபிறப்பு. நமக்கு முன்னுள்ள வேலை சீர் திருத்த வேலையல்ல; ஏனெனில், சீர்திருத்தம் என்பது, அழிவுக்குறிகள் நித்தமும் வெளித்தோன்றிக்கொண்டிருந்

தாலும், உள்ளடங்கிய உயிர்ச்சத்தி யொன்று இருப்பதையும், அச்சக்திமுழுதும் இன்னும் அழிந்துவிடவில்லையென்பதையும் குறிக்கிறது. நமக்கு முன் உள்ள சங்கடம் எந்த வகையைச் சார்ந்தது என்ற வினு இதனுல் நம்முள் எழுகின்றது. இனி விமோசனத்திற்கு வழியில்லை யெனும்படி அவ்வளவு தாழ்ந்த நிலைக்கு வந்துவிட்டோமா என்பதும், இருப்பதை முழுதும் அழித்துவிட்டுப் பழைய ஜனசமூகம் வருத்தமுறும்போதே அதனின்றும் புதியதொரு ஜன சமூகத்தைப் படைப்பதா என்பதும் ஒரு கேள்வி. மற்ருெரு கேள்வியாவது, இந்தப் பழமையான ஜனசமூகத்தினிடத்து இன்னமும் உயிர்ச்சத்திகள் எஞ்சியிருக்கின்றனவா என்பதும், அவ்வாருயின், அவைகளை ஒழுங்காகப் பாதுகாத்துச்சீர்திருத்தித் தற்கால முன்னேற்ற வழிகளிற் செலுத்துவதனுல் இனி அந்த ஜனசமூகத்திற்கு (உயிர்ச்சத்தி) வளர்ந்து பலம் மிகுந்து, அது கேடடையுமோ, அவிந்துவிடுமோ என்ற பயத்தைத் தாண்டிய நிலைவந்துவிடுமா என்பதுமே. இதில் உண்மை எது என்பதை ஒளியாது ஓரம்பேசாது ஆராய்வதற்கும், தற்போது காரியங்களின் நிலை இன்னது என்பதையும் அதற்குரிய பரிகாரம் உண்மையாகவே இன்னது என்பதையும் திட்டமாக அறிதற்கும், வேண்டிய ஒரு முயற்சி பின்வரும் பக்கங்களிற் காணப்படும்.

சென்னை

R சுப்பய்யா

# பொருளடக்கம்

3567



Dewan Bahadur, Sri. R. SUBBIAH NAIDU

# புத்துயிரவித்தல்

## அத்தியாயம் 1



## ஜப்பான் கற்றுக்கொடுக்கும் பாடம்

---

எனது ஜப்பான் பிரயாணமும், சிறிது காலம் அங்கே தங்கியபோது எனக்குக் கிடைத்த அனுபவமும் உண்மையாகவே எனக்கு ஊக்கத்தை ஊட்டியுள்ளன. அந்நாட்டினர் தம்மைத் தற்காலத்திற்கியைய அமைத்துக் கொண்டதை என்னென்றுரைப்பேன்! நடை யுடை பாவனைகளிலும், பொதுவாக வாழ்க்கையை நோக்கும் நிலையிலும், தற்கால நாகரிகம் போற்றும் உயர்ந்த மாதிரிகளையே அந்த மக்கள் ஏற்றுக் கொண்டுவிட்டார்கள். தங்களது விமோசனத்திற்கும் முன்னேற்றத்திற்கும் அது வொன்றே வழி யென்பதை அவர்கள் கண்டதும், மேற்றிசை நாகரிகத்திலுள்ள மிகச் சிறந்த பகுதிகளை யெல்லாம் சற்றும் தயங்காமல் தம்மதாகவே கருதி அவைகளைப்

பின்பற்றி வாழலாயினர். இத்தகைய பெரும் மாறுபாடு, தனித்தனி மக்களது சுயேச்சையாலும் ஸமூகத்தாரது சுயேச்சையாலும் மட்டும் உண்டான தொன்றல்ல; தற்காலத்துப் பற்பல நாட்டினரும் ஒருவர்க்கொருவர் தோழமை பூண்டொழுகும் பான்மையில் ஜப்பானும் தனக்குரிய இடம் பெற்று வாழ வேண்டுமாயின், அதனிடத்துப் பெரும் மாறுபாடு விளைதல் இன்றியமையாத தென்பதை, உறுதியாக உணர்ந்த அரசாங்கத்தாரது ஆணையாலும் இம்மாறுபாடு உண்டானதே யாம். ஒரே ஆணை பிறந்ததும், ஜாதி வேறுபாடுகளும் வகுப்பு வேறுபாடுகளும் பறந்துவிட்டன. உடை ஒழுக்கம் கல்வி கைத்தொழில் இவைகளிலும், இன்னும் தேசத்தின் உலக வாழ்வு முன்னேற்றத்திற்குரிய ஒவ்வொன்றிலும், அரசாங்கத்தின் செயல் தெளிவாகப் புலனாயிற்று. தேச முன்னேற்றத்திற்கு முதன் முதலாக முயன்றது தானே என்பதைப்பற்றி அரசாங்கம் பெருமை பாராட்டிக் கொள்வது பொருத்தமேயாகும்.

வெளிப் பார்வைக்கு ஒரு மாறுபாடு எங்கணும் புலப்பட்ட தெனினும், அக இயல்பு நெடுங்காலத்

திற்கு முன்னிருந்தவாறே இன்னும் நலமும் பலமும் குன்றாது ஒளிர்கின்றது. இல்ல வாழ்க்கை, முக்கியத் தன்மையை நோக்குங்கால் கீழ் நாட்டினுக்குரியதேயாகிறது. மக்கள் ஒருவர்க்கொருவர் பழகிக் கொள்ளும் முறைகள் தாய் நாட்டு வாழ்க்கையினையே முழுதும் ஆதாரமாகப் பற்றிச் செல்கின்றன. அந்த ஜாதியார்க்கு உண்மைப் பொருளின் மீதும் அறத்தின் மீதும் உள்ள பலமான பற்றே புறத்துள்ள முன்னேற்ற மனத்திற்கும் உறுதியான ஊன்றுகோலாகின்றது. கீழை நாட்டிலும் மேலை நாட்டிலும் மிகச் சிறந்தவையாவும் நலமுற ஒருங்கியைந்து நிற்கக் காணப்படுகின்றன. இதன் பயனே தற்கால ஜப்பான்.

ஜப்பான் காட்டிய வழியைப் பின்பற்றி ஒழுகுதல் இந்தியாவிற்கு நலந்தரும். இந்நாளைய ஒவ்வொன்றையும் விலக்குதலையும், முன்னாளையப் பயிற்சியையும் நாகரிகத்தையும் பற்றித் தருக்கித் திரிதலையும் விடுத்து, இப்பொழுதே தனக்குரிமையான தருமத்தின் முக்கியப் பகுதிகளை விடாது பற்றிக்கொண்டு, அதே சமயம் மேலை நாட்டினரிடத்துள்ள மிக உயர்ந்த பகுதிகளனைத்தையும்

பருகட்டும். அவ்வழி யொன்ருலேயே இந்தியா உய்வடையலாகும். உலக வாழ்க்கையில் தன்னி லும் சீரும் சிறப்பும் பெற்றுப் பொலியும் ஏனைய நாடுகளின் அனுபவங்கள் யாவும் இந்திய அன் னைக்கு வழிகாட்ட முன்னிற்கின்றன. செம்மைப் படுத்திக் கொள்ளுதற்குரிய மிக உயர்ந்த சாதனங் களைத் தேடி வெகு தொலை செல்லுதல் வேண் டாம். அனைத்தும் அருகாமையிலேயே உள்ளன. அவைகளைத் தக்காங்கு மாற்றி உட்கொண்டு எளி தாக ஒன்றித்துவிடச் செய்யலாம். இந்தியாவின் அக இயல்பு இருக்கும் வண்ணமே முழு வலியோடு பிறங்கவும், அதன் புறத்தோற்ற வகைகள் மட்டும் தற்கால நிலைகட்கேற்ப எளிதாக மாறி அமைதல் கூடும். இதை இந்தியா செய்யுமா? இதைச் செய்யு மாயின், வருங்காலம் உண்மையாகவே ஒளிவீசி நிற்கும்; இதைச் செய்யா தொழியுமேல், எதிர் காலம் எத்துணை இருண்டதாகுமோ?



## அத்தியாயம் 2

## செல்லுதற்குரிய வழி

---

நமது தேவைகள் யாவை? நமது பொருளாக்க மூலங்கள் யாவை? இந்தியா மிகப் பரந்த நாடாதலின் அதனது ஆக்க மூலங்கள் உண்மையாகவே ஏராளமானவை. பொருளாக்க மூலங்கள் அனைத்தையும் கணக்குப்பார்த்து அறிந்து, நம்மிடத்துள்ள மூலப் பொருள்களை ஆதாரமாகக்கொண்டு, மிக உயர்ந்த கைத்தொழில் அபிவிருத்தியை இன்னின்னவாறு நடை பெறச் செய்வது என்று ஒரு திட்டத்தை வரைதல் இயலாத காரியமாகுமா? மிக அவசியமான மூலப் பொருள்களில் யாதேனும் இங்கே கிடையா தொழியின், தற்கால வியாபார உலகத்துள்ள நிலைமைகட்கு இணங்கப் பண்ட மாற்று முறைப்படி அவைகளைத் தேடிக் கொள்ளுதல் எளிதாகும். நமது நாட்டின் ஜனத்தொகையோ மிகப் பெரிதாகும்; ஆதலின், நமது நாட்டைக் கைத்தொழில் நாடாக்குமாறு எல்லா வழியாலும் நாம் முயற்சி செய்வது ஒருபக்கம் இருக்க,

நிலத்தில் வாழும் பொது மக்கள் தகுந்த அலுவல் களைப் பெறுமாறு போதிய சிரத்தையையும் மற் ெறாரு பக்கம் எடுத்துக்கொள்ள வேண்டும். ஜப் பானில் வேலையில்லாத் திண்டாட்டப் பேச்சு பெரி தும் காதில் விழுவதில்லை; ஆங்குப் போல் இங்கும், நாட்டுக் கைத்தொழில் அபிவிருத்தியைப் புத்தி சாலித் தனமாகக் கையாண்டு வருதல் பெரிதும் விரும்பத்தக்க தாவதுபோல், ஐயமின்றி இயலு வது மாகும்.

இவைகளும் பின் வருவனவும் கோவையாக எழாது திடீர் திடீரென உதித்த எண்ணங்களே யன்றி வேறில்லை. சிந்தனையிலாழும் ஓர் இந்திய னது உள்ளத்து எழுந்தவாறே அவை குறித்து வைக்கப்பட்டுள்ளன. உண்மையுரைக்கின், இந்தி யராகிய நாம் தியானிப்பதில் மிக்க திறலுடை யோம்; ஒருவாறு பேசுவதிலும் திறலுடையோம்; செயலில் நாம் என்ன நிலையிலிருக்கிறோம்? இங் கேதான் நமது ஜாதியாரது பழமைப்பற்று உச்ச நிலையிலிருப்பது காணப்படுகிறது; நமது ஜன சமூ கத்திற்குக் கேட்டை விளைத்துள்ள ஒரு பயிற்சியை விடாது நாம் பற்றிவருதலின், அப்பற்று பித்தை

அணுகியுள்ளது என்னலும் தகும். இறந்தொழிந்த பண்டைக் காலத்தைப் பற்றிப் பெருமை பாராட்டு வதை இந்தியா நிறுத்துவது என்றே? எதிர் காலத்தை நோக்கவும், தனது மஹத்தான சங்க டங்களைத் தீர்ப்பதற்காகத் தனது ஆக்க மூலப் பொருள்கள் அனைத்தையும் தனது அறிவுச் செல் வத்தையும் பயன்படுத்தித் தன்னைப் புதிதாக அமைக்க முயலவும், தொடங்கும் நாள் எந்நாளோ?

இது ஒரு மிகப் பெரிய பலம் நிறைந்த முயற்சி யேயாகும்! சமயம் இப்போது கைகூடிவிட்டது. இவ்வலிமையுற்ற நாட்டில் யாதோ ஒன்று பெரும் பிழையாயுள்ளது என்பதை அரசாங்கமும் பொது மக்களும் ஒருங்கே உணர்ந்து வருகின்றனர். சந் தர்ப்பங்கள் யாவும் மங்களகரமாயுள்ளன. இந்தியா உடனே செய்யத் தொடங்குமா?

---

## அத்தியாயம் 3

## பழங்கருத்துக்கள் புதுக்கருத்துக்கள் இரண்டையும் கலத்தல்

---

ஆனல் ஒரு கேள்வி கேட்கலாம்; தற்கால உலக முழுதும் புகழப்படுவதும், இந்தியன் ஒவ்வொருவனும் நியாயமாகவே பெருமை பாராட்டிக் கொள்ளத் தகுந்ததுமான நமது பழமையான பயிற்சியை ஆழமான குழி தோண்டிப் புதைத்து விடவேண்டியது தானே? ஒரு புதிய அன்னிய நாட்டுப் பயிற்சியை நம்மீது சுமத்திக் கொள்ள வேண்டியது தானே? பின்னது வேரூன்றுமா? வேரூன்றினுலும்; அது செழித்து வளருமா?

நமது பழமையான பயிற்சிக்குக் காட்டும் நன்மதிப்பில் நான் ஒருவர்க்கும் பின் வாங்கியவனல்லேன். வேறு எவரைப் போன்றும் நானும் அதைப்பற்றிப் பெருமை பாராட்டிக் கொள்கிறேன். ஆனல் இப்பழமையான பயிற்சி யென்னும் போர்வையால் மூடி, உள்ளே ஸமூகம் சீர் கேடடைந்து வந்திருப்பதையும், விரைவாக இன்னும் கெட்டு வருவதையும் ஒருவர் ஆதரித்து வரு

தல் வேண்டும் என்பது பொருளாகாது. அப்ப யிற்சியைப் புது மாதிரியாக்க வேண்டும், அதற்கு இளமை நலம் ஊட்ட வேண்டும்; இது தற்காலப் பயிற்சியின் பெருமையை ஊரூராக முறையாக வாய்ப்பறையறைந்து அறிவித்துப் பரப்புவதனுலே தான் செய்ய இயலுவ தொன்று. இதைச் செய் யினும், இந்நாட்டில் தற்காலப் புதுக் கருத்துக்களைப் புகுத்துதலினுல் பழைய பயிற்சிக்குச் சாவுமணி யடித்ததாகாது. நம் பழைமையான தத்துவ ஞானம் எவ்வகை வேறுபாடுகட்கும் வழக்குகட் கும் அப்பாற்பட்ட தன்ருே? ஆதலின் முற்கூறிய முயற்சி அதனை எல்லாவற்ருனும் மாறுபடுத்தமாட் டாது. பழங்கருத்துக்களையும் புதுக்கருத்துக்களையும் ஒன்ருகப் பரப்புவதனுல், அக்கலவையினின்றும் நமது நாட்டு நிலைமைகட்கும் நமது ஸமூகத்தாரது பேரறிவுத் திறமைக்கும் முற்றிலும் ஒத்த சிறப் பான ஒரு புதிய பயிற்சி அரும்பி மலர்ந்து, பழம் பயிற்சியையும் ஒளியால் விஞ்சும் என்று எதிர் பார்த்தலும் நடைபெருத தொன்ருமோ? நமது பழம் பயிற்சி, அதன் உயர்ந்த தத்துவ ஞானத் திற்காகப் பெரிதும் மதிக்கப்படினும், தற்காலத்

தேவைகட்கு ஏற்றவாறு பயனளிக்கும் பான்மை யற்றதென்பது நிலை நாட்டப்பட்டதன்றோ?

அரசாங்கம் சிறிது காலத்திற்கேனும் தற்காலக் கருத்துக்களை நாற்றிசையும் பரப்புதற்காக மட்டும் தனது கவனத்தைச் செலுத்தி வருதல் வேண்டும். இது நமது பழமையான பரம்பரையுரிமையைக் கெடுத்தற்கு ஏதுவாகாது. மலையன்ன பெரு முயற்சி எடுத்தாலன்றி, ஒன்றும் கைகூடாது. சாந்தப் படுத்தும் இயல்பினையுடைய முன்னைய முயற்சிகள் யாவும் பலியா தொழிந்ததைக் கண்டோமன்றோ? ஆதலின் கண்டிப்பான முறைகளைக் கையாளுதல் அவசியம். சிறிது காலத்திற்கேனும், தற்காலக் கருத்துக்கள் மேலோங்கித் தலையெடுத்து அடக்கியாள வேண்டும். தற்காலப் படுத்துதலைக் குறை கூறுவார்க்கு நான் கூறுவது யாதெனில், தற்கால நிலைமை நெடுநாள் நிலைத்திருக்க ஒண்ணாது என்பதே. மாற்றம் நிகழ்வதோ தடுத்தற்கரியதாம். அம்மாறுபாட்டை எளிதாகவும், அழகாகவும் ஏன் விளக்கக்கூடாது? தொந்தரவை அளிக்கும் சக்திகள் நமது நாட்டைத் தம் வசப்படுத்தி, அனைத்தையும் தலை கீழாக்கும் ஒரு புரட்சியை விடாது தடுத்தல் நன்றன்றோ?

---

அத்தியாயம் 4

## பழைய இந்தியாவில் கிராம நிலை



இவ்விடத்து, பழைய இந்தியாவில், கிராமத்தின் நிலை எவ்வாறு இருந்த தென்பதைச் சிந்திப்போம். பழைய இந்தியாவில் பொது மக்களின் நிலை எவ்வாறு இருந்தது?

சரித்திர ஆராய்ச்சிக்கு முற்பட்ட காலத்தைப் பற்றிய வரலாறுகளைக் கூறும் பழ நூல்களாகிய புராணங்கள், கொண்டாடுதற்குரிய சிற்ப நூல் கொள்கைகளை ஆதாரமாகக் கொண்டு அமைக்கவும் போற்றவும் பெற்ற பெரு நகரங்கள் சீரும் சிறப்பும் பெற்றுப் பொலிந்ததைக் கூறுகின்றன. மஹாபாரதத்தில் மயன் எனும் சிற்பியால் பாண்டவர்க்கெனக் கட்டப்பட்ட அரண்மனையின் வருணனை தற்காலச் சிற்ப முறைகள் அனைத்தையும் தோல்வியுறச் செய்கிறது. ஒரு சிறிது கவியின் உயர்வு நவிற்சியணிக்கு இடங் கொடுப்பினும், அந்நூலிற் சித்திரிக்கப்படும் கவியின் கலைச்சுவை

யும் அழகும் மிக மேம்பட்ட முறையில் கருதப் பட்டுள்ளன என்பது உண்மையேயாம். பழைய காலத்து மண்மேடுகளிற் சிலவற்றை இன்று தோண்டி ஆராயுங்கால், நெடுங்காலத்திற்கு முன் னும் மிக அழகாக அமைக்கப்பட்ட நகரங்கள் இருந்தமைக்குச் சான்றுகள் காணப்படுகின்றன. சிற்சில இடங்களில் வெட்டி யெடுக்கப்பட்ட பண் டைக் காலத்திய வீட்டுக் கருவிகளும், கலங்களும் அவைகளைப் பயன் படுத்தியவர்கள் உடற்கட்டு வாய்ந்தவராயிருத்தல் வேண்டும் என்பதை ஊகித் தற்கு ஏதுவாகின்றன. பழங்கால இந்தியர் மிக்க உடலுறுதி பெற்றிருந்தனர் என்பது இதிலி ருந்தும் இன்னும் ஏனைய சான்றுகளிலிருந்தும் எளிதே புலனாகின்றது. அவர்களது உடலும் உள் ளமும் வலிமை பெற்றிருந்தன.

பழங்காலத்து மக்களின் உடல் வண்மையும், உடல் நலமும், நன்கமைந்த பெரு நகரங்களின் பொலிவும் ஒப்புக் கொள்ளத்தக்க உண்மைகளா யினும், கிராம வாழ்க்கையைப் பற்றி நமக்கு அறி யக்கிடப்பது மிகச் சிறிதே என்பதும் தேற்றம். குறிப்பிட்ட சில நகரங்களைச் சார்ந்த கிராம மக்

கள் தம்மைப் பிடிக்கும் காட்டு விலங்குகளினின்றும், தமது ஊர்களைச் சூறையிடும் அன்னிய அரசர்களினின்றும் காத்தளிக்குமாறு, அரசர்களிடம் முறையிடுவ தொன்றே புலனாகின்றது. ஆனால் அந்தப் பழங்காலங்களில் உண்மையாகவே கிராமங்கள் தோன்றி ஓர் அமைப்புப் பெற்றிருந்தன என்று கருதுதற்கும் இயலவில்லை. சில சிற்றூர்களும் ஆசிரமங்களும் ஒரு புகழ் பெற்ற முனிவரின் பாதுகாப்புக்கு உட்பட்டிருந்தது என்பதும், ஆசிரமத்தைச் சார்ந்தவர்களே ஒருக்கால் அங்கு வாழ்ந்து வந்திருக்கலாம் என்பதும் நமக்குத் தெரியவருகின்றன; ஆனால் இவ் ஆசிரமங்கள் ஒருக்காலும் உண்மையான இந்திய கிராமம் ஆகா அல்லவா ?

ஆயினும் பண்டைய கிராமம் பொதுவுடைமையை ஆதாரமாகக் கொண்டு அமைக்கப்பட்டிருந்தது என்று நம்புதற்குக் காரணங்கள் பல உள்ளன. நிலப் பொது உரிமை முன்னிருந்தமைக்குச் சிற்சில சாயைகள் இவ் இராஜதானியிற் சில இடங்களில் இன்றளவும் தென்படுகின்றன. ஒவ்வொரு கிராமத்தின் எல்லைகளும் சந்தேகமற வரை

யறுக்கப்பட்டன. விவசாய நிலம், மேய்ச்சல் நிலம், காடு, இதர நிலங்கள் இவை ஒவ்வொன்றும் தனித்தனியாகப் பிரிக்கப்பட்டிருந்தன. இத்தகைய பற்பல நில வகைகளும் பெரும்பாலும் பொதுவாகப் பயன்படுத்தப்பட்டும் அனுபவிக்கப் பட்டும் வந்தன. கிராம அதிகாரிகளும் கிராமத் தொழிலாளரும் தாம் தாம் செய்த அலுவல்களுக்காகப் பொது மாசூலில் பிறரினும் அதிக ஊதியம் ஒருக்கால் பெற்று வந்தனர் போலும்; ஆனால் ஈதொழிய, ஒவ்வொரு கிராமத்தானும் கிராமப் பொதுச் செலவுக்குக் கொடுத்துதவினன், பொது விளையுளில் தானும் பங்கு பெற்று வந்தான்.

இந்நிலப் பொதுவுரிமை முறை, தனியுடைமை மக்கட்கு உண்டாவதைத் தடுத்து வந்த போதிலும், பிற கலப்பின்றி ஆட்சி முறையில் இருந்ததாகத் தெரியவில்லை. இதனினும் சற்றே மாறுபட்ட ஒரு முறை வழக்கத்தில் இருந்திருக்கக்கூடும்; அதாவது, ஒவ்வொரு குடும்பமும் தன்னுலியன்ற அளவிற்கு நிலத்தைப் பெற்றுக்கொண்டு அதைச் சாகுபடி செய்து, அதனல் வரும் விளையுளினின்றும் கிராமப் பொதுச் செலவிற்குப் பொருளீந்து வந்திருக்

கக்கூடும். உழுதற்குரிய நிலங்கள் இன்னின்னார்க்கு உரிமை யென ஒருக்கால் வகுக்கப்படவில்லை போலும்; ஆனால், வேறு வேறு குடும்பங்கள் வேறு வேறு மனைகளைக் கைப்பற்றி வாழ்தல் தனித்த குடும்ப வாழ்க்கைக்கு இன்றியமையாதென உணரப்பட்டது. ஆகக் குடும்பமே ஸமூக வாழ்க்கையின் மூலமாயிற்று; உறைவிடங்கருதித் தனித்தனியாக அது வாழ்ந்து வந்ததெனினும், எல்லாப் பொதுக் காரியங்கட்கும் ஏனைய குடும்பங்களோடு தோழமை பூண்டு ஒன்றுபட்டு வாழலாயிற்று.

இங்ஙனம் பொதுமை யுணர்ச்சியோடு பொது வாழ்வு வாழ்தல் யாதானும் ஒரு வழியில் இருந்தே வந்தது. குடும்பங்களின் தொகுதிகள் தமக்குப் போக்கு வரவு வசதியமைந்த செழிப்பான நிலப் பகுதிகளில் ஒன்றாக உறைந்தும், பாதுகாப்புக்கும் உயிர் வாழ்தற்கும் ஒரே ஸமூகமாகத் தொழில் செய்தும், ஆயினும் குடும்பம் ஒவ்வொன்றும் தனது தனித்த பான்மையை வாடாது போற்றியும் வந்த ஒரு முறையே நமது பழைய கிராம வாழ்க்கையாயிற்று. மிகப் பழமையான கால முதலே ஒருக்கால் சரித ஆராய்ச்சிக்கு எட்டாத கால முதலே, குடும்பமும் கிராமமும் இருந்து வந்ததாகக் கருதுதல் அவசியமேயாகும்.

---

## அத்தியாயம் 5

## பண்டைய நாளிலுள்ள நிலை

---

ஒரு பழமையான நாகரிகத்தின் எஞ்சியுள்ள, சின்னங்களைத் தேடிக் கண்டு, அந்நாளில் மக்களின் நிலை எவ்வாறிருந்தது என்பதையும், அதிலிருந்து தற்கால நிலைக்கு அது எவ்வாறு மாறுபாடடைந்தது என்பதையும் ஆராய்வதினும் மிக்க இனிமையான பிறிதொரு முயற்சி தேச சரித்மாணவர்க்கு இல்லை. ஆனால், இந்தியாவிலோ பழைய காலங்களில் அதன் சரித்திர சம்பந்தமான நிகழ்ச்சிகளை உள்ளவாறே எழுதி வைத்தல் சிறப்பாகப் புறக்கணிக்கப்பட்டு வந்ததாதலின், அம் முயற்சி உண்மையாகவே கஷ்டமான தாகும். பழைய நூல்களையே நாம் ஆதாரமாகக் கொள்ள வேண்டியிருக்கிறது. ஆனால் அவை பண்டைக்கால நிலையை ஒருவாறு பொதுப்பட அறிய ஏதுவாயிருப்பினும், புராண வரலாறுகளாகவே ஒப்புக் கொள்ளத் தக்கனவாகின்றன. இன்னும் சமீப காலத்திற்குள் சிலாசாஸன ஆராய்ச்சியாளரால்

பூமியினின்றும் தோண்டி யெடுக்கப்பட்டுள்ள சில பெரு மதிப்புள்ள பொருள்களும் நமக்கு ஆதார மாகின்றன. இத்துணைகளைக் கொண்டு ஆராயுங் காலத்து,இந்நாட்டில் பழமையான நாகரிகம் ஒன் றும், நன்கு சிந்தித்து அமைக்கப்பட்ட நகரங்க ளும், பெருந்திறல்களும் பெருஞ் சத்தியும் வாய்ந்த ஒரு நாகரிகமுற்ற ஜாதியாரும் இருந்தமை புலப் படுகின்றது. கவின் கலையிலும் தத்துவ ஆராய்ச்சி யிலும் உயர்ந்த புலமை பெற்று விளங்கிய நல் லிசையாளர் அப்பழங்காலத்து வாழ்ந்தனர். அவ் வளவு மேம்பட்ட பயிற்சியும் தலைமைப் பதவியும் ஐயமற அப் பழமையான காலங்களில் இருந்ததி லிருந்து, உடல் நலமும் சுறுசுறுப்பும் வாய்ந்த மக் கள் இருந்தமை ஊகிக்கப்படுகின்றது. பெரு நக ரங்கள் இருந்தமையால், நாட்டுப் புறங்களில் செழு மையுற்ற நன்னிலை யெய்திய கிராமங்கள் இருந்த மையும், அவை அந்நகரங்கட்குக் கிளை நதிகள் போன்று அமைந்தமையும் தானே போதரும். ஆக, மிகப் பழங்காலம் முதற்கொண்டே கிராமங் கள் இருந்து வந்தன எனினும், இக்காலத்துப் போன்று அத்துணை ஏராளமாகவும் பெரியனவா

யும் இருந்திருக்கமாட்டா என்பதை மெய்யாகக் கொள்ளல் இழுக்காகாது.

ஆனல் அக்கிராமங்கள் எவை போன்றிருந்தன? என்று வினவலாம். அவை நன்கு சிந்தித்து அமைக்கப்பட்ட அடிப்படைமீது எழுந்தனவா? அன்றி, வசதியுள்ள இடத்திலே தனித்தனியாகக் குடிசைகளும் உறைவிடங்களும் கொத்துக் கொத்தாகத் தோன்றினவா? இவைகளை யெல்லாம் அடக்கி யாளுதற்கு ஏதேனும் ஓர் ஆட்சிமுறை ஏற்படுத்தப் பட்டிருந்ததா? இவைகளின் பொருளாதார நிலை எப்படி யிருந்தது? இவைகளின் ஸமூக அமைப்பும் பயிற்சியும் உடல் நலமும் பலமும் எவை? இவைகளனைத்தும் எளிதே கண்டறியக் கூடியனவல்ல; ஆனுலும், ஒருவாறு வது சில உண்மைகளை நாம் ஊகித்தறியலாம். அவையாவன:- "இன்றைக்கு வெகு தொலையிலுள்ள காலங்களில், பல நல்ல வீரர்கள் இருந்தனர்; நமது நாடு மிக உயர்ந்த தகுதியுடைய தலைவர்களைத் தோற்றுவித்துக்கொண் டிருந்தது; நாடு தனக்கு வேண்டியதைத் தானே தேடிப் பெற்றுக்கொண்டிருந்த ஒரு பொருளாதார நிலையில்

இருந்தது; இன்னும், மிகப் பழைய காலமுதலே அதன் புகழ் வெகு தொலையிலுள்ள நாடுகட்கும் பரவியிருந்தது'' என்னும் நான்குமே. நமது நாடு நிலவுலகத்தில் அமைந்திருக்கும் நிலையோ அதன் மக்கள் தமது உள்நாட்டு வாழ்க்கையில் பல துறைகளிலும் முன்னேற்ற மடைதற்குச் சிறப்பாகச் சாதகமாயிருந்தது. நீண்ட கடற்கரையும் நிலவளஞ் சொரியும் ஆறுகளும், எங்கணும் பரந்த விசாலமான பீடபூமிகளும், சுரங்கப்பொருள்களும், ஏனைய இயற்கையான தொழிலாக்க மூலப்பொருள்களும் நமது நாடு எய்தியிருந்தமையால், சமாதானமான வாழ்க்கை யொன்றுமட்டும் உறுதியெனில், கலையும் கைத்தொழிலும் யந்திரத்தொழிலும் வளர்ச்சியடைதற்கு ஏற்ற எல்லாவசதிகளையும் பெற்றிருந்தது என்னலாம். ஆனால் பழமையான காலம் முதலே பிறர் அதன்மீது படையெடுக்கவும் அதனைத் தாக்கவும் நேர்ந்தமையால், எக்காலத்தும் அதற்குப் போதிய ஓய்வு கிடைத்தல் இயலாததாயிற்று. ஒருக்கால் பிற நாடுகள் உண்டாகாமலோ அல்லது உண்டாய்க்கொண்டோ இருந்த மிகப் பழமையான காலத்தில் அதற்குச் சற்று ஓய்வு கிடைத்திருந்தது போலும்.

---

அத்தியாயம் 6

## கிராமத்தில் தோன்றியவை சில



நினைவுக் கெட்டாத காலமுதலே இந்திய கிராமம் இருந்து வந்தது என்பதை ஐயமற இப்போது ஒப்புக்கொண்டு விடலாம். அக்கிராமம் அரசாங்கத்தின் பொருளாக்கத்திற்கும், செல்வத்திற்கும், செழிப்புக்கும் பொதுவாக உதவி புரிந்து வந்தது என்பதும் சொல்லாமலே விளங்கும். இன்னும், அக்காலத்துக் கிராமம் வடிவத்தும் அமைப்பிலும் இந்நாளைய கிராமத்தைப் போலவே இருந்ததென்பதும், ஆனல் பிற்காலத்து நிகழ்ச்சிகளால் சில மாறுபாடுகள் அவசியம் அது அடைந்திருத்தல் வேண்டும் என்பதும் நாம் உண்மையாக எடுத்துக் கொள்ளலாம்.

இந்திய கிராமத்தின் இப்போதைய வடிவம் பெரும்பாலும் பிராமணரைச் சார்ந்துள்ளது என்பது அதன் கோவில் குளங்கள் ஜாதிவாரியாகத் தனித்தனி இடங்களில் பிரிந்து வாழ்தல்

முதலியவற்ருல் விளங்கும். முற்காலத்தும் இது இல்லாதிருந்ததோ? அது இயலாது. ஏனெனில், ஒரு காரணமாவது, கிராமக் கோவில்கள் தலையெடுத்தது புத்தரது காலத்திற்குப் பின்னுள்ள காலத்திலேதான் என்பது தெரிய வருகிறது. புத்த மதம் அரசாங்கத்தின் மதமாயிருக்குங் காலத்துப் பல கோவில்கள் இருந்திருத்தல் இயலாது; ஆயினும், மதசம்பந்தமான பிரசங்கங்களைக் கேட்கும் பொருட்டுக் கிராமத்தார் கூடுவதற்காக மடங்கள் இருந்திருத்தல் கூடும் என்பது பொருத்தம் தான். கோவில்கள் புத்தமத ஆசிரமங்களினின்றும் மடங்களினின்றும் பிராமணரது முயற்சியால் எழுந்தன போலும். இன்னெரு காரணமாவது, ஜாதி வேறுபாடு பிராமணரது ஆட்சிக் காலத்திருந்தது போல, அவ்வளவு மும்மரமாகவும் கட்டுப்பாடாகவும் புத்தமதக் காலத்தும் அதற்குப் பிற்காலத்தும் இருந்திருக்க முடியாது என்பதே. ஆனல் பற்பல தொழில்களைப் புரிந்த பலப்பல குடும்பங்கள் தனித் தனியாகப் பிரிந்து வெவ்வேறு இடங்களில் ஒருங்கு கூடி வாழும் இயல்பு அப்பொழுதே தோன்றியிருந்தது என்பதையும் ஒப்புக் கொள்வது அவசியமே. இப்பிரிவுகள் தொழிலைப் பற்றியே பெரும்

பாலும்எற்பட்டனவா யிருத்தல் வேண்டுமேயன்றி வேறு காரணத்தால் அல்ல என்னலாம்; ஒருக்கால் வேறு வேறாக இருந்த தொழிலாளரது தொகுதிகளி லிருந்தே ஜாதி முறைமை தோன்றியது போலும்; அம்முறைமையைத் தூயதாக்கி வளர்த்துப் பிராமணர் தாம் சிறு பான்மையோராய் இருப்பது கருதி, தமக்கு ஸமூக காரியங்களிலும் மதகாரியங்களிலும் இருந்த உயர்ந்த அதிகாரத்தை நிலைக்கச் செய்தற்கு அந்த ஜாதி வேறுபாட்டை ஒரு சாதனமாக ஆக்கிக் கொண்டனர் போலும்.

இக்கிராமப் பகுதிகளை நிறுவுவதற்கு, உடல் நலம் விளைக்கும் நீர்வசதியுள்ள இடங்களாகிய ஜீவநதிகளின் கரைகளும், நிலவளம் மிக்க வண்டற் பிரதேசங்களும், கள்வர் கூட்டம் படையெடுத்து வருங்கால் பத்திரமாகப் பாதுகாப்பதற்கு எளிதாயிருக்கும் அரணமைந்த இடங்களும், இவை போன்ற பிறவும் ஆகிய தக்க இடங்களையே தேடிக் கண்டுபிடித்தல் இயற்கையே. இக் கிராமப் பகுதிகள் இப்பழமையான தேசத்தின் நெடுங்கால சரித்திரத்து அமைதியாக மிகப் பெருங் காரியங்களை இயற்றிவந்துள்ளன.

ஆனால் இந்திய கிராமம் தோன்றினதும் சிறிது காலத்திற்குள் ஓர் அழகு கெட்ட நிகழ்ச்சி யொன்று நடைபெறலாயிற்று; எத்தேசத்தும் அது மாதிரியாக உண்டானதில்லை. அதன் அடிப்படைக் கருத்தே இயற்கைக்கு முரணாயிருந்தது; இது யாதெனில் புலையர்களது உறைவிடங்களாகிய சேரிகள் கிராமத்தில் தோன்றினமையே. இது எங்கிருந்து உண்டாயிற்றோ, எதற்காக அது கிளம்பியதோ, இலக்ஷக்கணக்கான மக்கள் முக்கியமான ஸமூகத்திற்குப் புறம்பானவர்களாகக் கருதப்படுகிறார்கள். இந்த ஏற்பாடு வெகுகாலத்திற்கு முன்னமே முதல் இருந்ததா? அல்லது, பிற் காலத்து அது தோன்றியதா?

---

## அத்தியாயம் 7

## தீண்டாமையின் உற்பத்தி

---

இந்தியாவிலுள்ள தீண்டாமை ஏற்பாட்டின் உற்பத்தியைப்பற்றிப் பல கொள்கைகள் உலவி வருகின்றன. தீண்டத்தகாதவர் எனப்படுவோர் இந்நாட்டின் புராதனக் குடிகள் என்றும், பிற் காலத்து நாட்டின் மீது படையெடுத்துவந்த திரா விடர்கள் ஆரியர்கள் போன்றவரது தருக்கினலே அக்குடிகள் தாழ்த்தப்பட்டனர் என்றும் சிலர் கருதுகின்றனர். ஆரியரோடு ஐக்கியமடைந்து அவ்வுருப்பெற மறுத்த பழங் குடியினரில் எஞ்சி யுள்ளவரே அவர் என்பது மற்ருெரு சாராரது கருத்து. மூன்ருவது சாராரது கொள்கைப்படி, அவர்கள் முன்னர் நான்கு வருணங்கட்கு உட்பட் டவராயிருந்து, பின்னர் ஜாதிமுறைமை ஆரம்ப வீரியத்தோடு நடைபெற்ற காலத்து, ஜாதிக் கட் டுப்பாட்டுக்கோ ஸமூகக் கட்டுப்பாட்டுக்கோ மீறி ஒழுகியதற்காகக் கிராம எல்லையைக் கடந்து, அதைச் சார்ந்த சுற்றுப்புறங்களில் வாழும்படி வற்புறுத்தப் பட்டவர்களாவார்.

பிராமண மதம் புத்த மதத்தை அடக்கியாண்டபின், புத்த மதத்தினர் வேருகப் பிரித்து வைக்கப்பட்டுத் தீண்டத்தகாதவராக நடத்தப்பட்டார் என்பதாகவும் பிறிதொரு கொள்கை உண்டு. ஆனல் இது பொய்ம்மைபொதிந்ததேயாம். அரசாங்கம் ஆதரிக்கும் மதக் கொள்கையையே பொது ஜனங்கள் பின்பற்றிவந்தனர்; அவ்வாருயின், அரசர்கள் கோவில்களையும் ஜாதிகளையும் கொணர்ந்த பிராமண மதத்தை அங்கீகரித்தபோது, பொது ஜனங்கள் அனைவரும் நாட்டைவிட்டு விலக்கப்பட்டார்கள் என்று கொள்ளல் பொருந்துமா? பிராமண மதம் தலையெடுத்துள்ள இன்றைக்கும், நிர்வாணம் புனர்ஜன்மம் எனும் இரு புத்தமதக் கொள்கைகளும் இந்துகட்கு மிக அருமையானவையாகின்றன; மேலும் புத்தமதத்தினர் ஒருக்காலும் ஜாதிக்குப் புறம்பானவரென அவமதிக்கப்படவில்லை. அம்மட்டோ! இன்றும் பெரு மதிப்பைப் பெற்று வருகின்றனர்.

அரசியல் சார்பாகப் பழிக்குப்பழி வாங்கும் செயலின் பயனுக விளைந்தது தீண்டாமை என்னலும் வழக்கிற்கு நிற்கமுடியாததாகும்; ஏனெனில்

நான்கு வருணத்தாரிற் பலர் படையெடுத்து வந்தவர்களின் நேர் மரபினைச் சார்ந்தவர் என உரிமைகொண்டாட ஒண்ணுது. படையெடுத்தவர் பலராதல் இயலாதாகலின், பழங்குடியினைச் சார்ந்த நிலவாசிகளால் அவர்கள் எளிதாகத் தம்முடன் ஒன்று படுத்திக் கொள்ளப் பட்டனர் என்பதே பொருந்தும்.

தீண்டாமை ஏற்பாடு ஜாதி முறைமையோடு நேர் தொடர்புடையது என்பதே எனது கருத்தாகும். ஒன்றைவிட்டு மற்றொன்றிற்குப் புக இயலாதபடி நிலையான வரம்புகளையுடைய ஜாதிப்பிரிவினை முறை வற்புறுத்தப் படுமாயின், ஜாதி விலக்கத்தையும் ஸமூகத்தார் கைக்கொள்ளுதல் அதன் பயனாக இன்றியமையாத தாகுமன்றோ? மேலும், பொதுமக்கள் அறியாமையில் மூழ்கியிருந்து, தற்கால யுத்திக்கு ஒரு சிறிதும் பொருந்தாத நம்பிக்கைகளைக் குருட்டுத்தனமாகப் பற்றிக் கொண்டிருந்த காலை, ஜாதி விலக்கம் என்னும் முறை எக்காலத்தினும் இருந்ததைப் பார்க்கிலும் மிகச் சாதாரணமாக வழங்கிவந்திருக்க வேண்டுமல்லவா? தீண்டாமை ஏற்பாட்டிற்கு இவ்வாறு காரணம் கூறு

வதற்கு ஆதாரமும் உளது; அது யாதெனில், கிராமத்தைச் சுற்றியுள்ள சேரிகளில் வாழும் மக்கட்கும் கிராமத்திலுள்ளவர்க்கும் வழக்கங்களிலும் பழக்கங்களிலும் பெயர்களிலும் வீட்டுப்பெயர் அல்லது குடிப்பெயர்களிலும் ஓர் அடிப்படையான ஒற்றுமை தென்படுதலே.

தீண்டாதார் வாழும் சேரிகள் கிராமத்தின் வெளிப்புறத்திலேயே இருந்தன; அவை இன்றைக்கு இருப்பனபோல் கிராமத்துக்கு முக்கிய ஆதாரமாக இருந்தன. சேரிகள் இல்லாவிடில் கிராமம் பாழடையும்.



## அத்தியாயம் 8

# ஜாதி முறைமை

---

இந்தியாவில் உள்ள ஜாதி முறைமையின் உற்பத்தியும் வளர்ச்சியும் இணையற்ற நிகழ்ச்சிகளாதலின், அதைச் சற்று விபரமாக ஆராய்தல் தகுதியேயாகும். நமக்குக் கிடைத்துள்ள எல்லா வரலாறுகளிலிருந்தும், அறியக்கிடப்பது யாதெனில், பழைய இந்தியாவில் ஜாதி முறைமை அதிகமாய் இருந்ததில்லை என்பதே. இந்நாட்டில் ஆரியர்க்கு முன் குடியேறிய ஜாதிகள் இன்று காணப்படுவது போன்று ஜாதிப்பிரிவுகளை உடையவராயிருந்ததாகத் தோன்றவில்லை. 'ஜாதி' என்ற கருத்தைக் குறிக்கும் முக்கிய மொழியாகிய 'வர்ணம்' என்னும் மொழியும் 'ஜாதி' யென்னும் மொழியும் தாய் மொழியில் வழங்கி வந்துள்ளனவேனும் வடமொழிச் சொற்களேயாம். அம் மொழியின் பகுதிப் பொருளை ஆராயுங்கால், நிறத்தின் மேன்மையைப் பற்றிக் கொண்டாடிக் கொண்டு ஜனங்கள் நமது நாட்டிற்கு வந்து குடியேறிய

ஒரு நிலை இருந்ததாக ஊகிப்பதற்கு இடம் தருகின்றது. இக்கருத்து ஆரியர்களது காலத்துக்குப் பிற்பட்டுத் தோன்றிய தொன்றே யென்பது வெளிப்படை.

ஒரு முறை உண்டு பண்ணப்பட்ட இப்பிரிவு யாதானும் ஒரு காரணத்தைப்பற்றி வளர்க்கப்பட்டும், பெருக்கப்பட்டும் வரலாயிற்று. தொழிலாளர் சங்கங்களும் வியாபாரச் சங்கங்களும் வெவ்வேறு ஜாதிகளாகப் பிரித்து வைக்கப்பட்டன. உத்யோக சம்பந்தமான பிரிவுகளும், தொழில் சம்பந்தமான பிரிவுகளும், ஞான வாழ்க்கை மத வாழ்க்கை சம்பந்தமான நம்பிக்கைகளில் உள்ள சிறப்பியல்புகளும் இவையனைத்தும் ஜாதிப் பிரிவுகளையும் அவைகளின் உட்பிரிவுகளையும் பெருக்கிக் கொண்டு போதற்கே ஏதுவாயின. ஒருக்கால் இவை மத ஆட்சி அரசியலின் ஆதரவையும் பெற்றிருந்தன போலும்; ஏனெனில், இத்தகைய அரசியலிற்குப் பலத்தையளிப்பன பொது மக்களின் ஒற்றுமையின்மையும் பலவீனமு மல்லவா? இவை அவ்வளவு பெருகிக் கொண்டு வந்தமையால், தற்கால இந்துக்களின் கொள்கையில் ஜாதிப் பிரிவு

களும் உட்பிரிவுகளுமே பெரும்பாலும் அடங்கியுள்ளன. இவ்வொன்றிலேதான் இந்துக்கள் மூராணுத ஒழுங்கான தன்மையை உடையராகின்றனர்.

நவீனக் கருத்துக்கள் தாக்குதலினுல் இப்போது ஜாதிகளைப் பிரிக்கும் இடைச் சுவர்கள் இடிந்து விழுந்துகொண்டிருக்கின்றன என்பதைப்பற்றி ஐயமில்லை. ஆனுலும் பொது மக்கள் அம்முறைமைக்கு இன்னும் கட்டுப்பட்டொழுகும் நிலை நம்புதற்கு அரிதென்றே கூறலாம். சிலர் தமது பிறப்பின் உயர்வைக் கருதித் தருக்கித் திரிதலும், பலரிடத்துத் தமது பிறப்பின் தாழ்வைப் பற்றிய உணர்ச்சி ஊன்றியிருத்தலும் கற்பனைச் சக்தியையும் திருகி நிற்கச் செய்து, தகுதி வாய்ந்த பலரது உள்ளத்தும் தானுக எழும் முயற்சியைத் தகைந்து மாய்க்கிறது. புறத்தே ஒருவரிடமிருந்தும் துணையையும் உதவியையும் எதிர்பாராது சில குடும்பங்கள் தமது பரம்பரைக் காணியாகக் கைத்தொழில்களையும் வியாபாரத் தொழில்களையும் பின்பற்றுதலும்; இயற்கைத் திறமைகளையும் சார்புகளையும் பொருட்படுத்தாது, பிறப்பொன்றையே ஆதாரமாகக் கொண்டு தொழில்களைக் கடுமையாக மக்க

ளின் மீது சுமத்தியதும், மிகச் சுருங்கிய எல்லே களைத் தாண்டி வெளிச்செல்வதற்கு இடம் இல்லா மையும்; இவையாவும், இம் முறைமை எவைகளைப் பாதுகாக்குமெனக் கருதினர்களோ அந்தக் கலே களையும் தொழில்களையும் கேடடையவும் அழிக்க வும் செய்யும் இயல்பினவாயின. ஒவ்வொரு கிரா மத்தையும், தனக்குள்ளேயே எல்லாவற்றையும் அடக்கிக்கொண்டு தனியாக வாழும்படிச் செய்யும் முறையில் பிறவற்றினின்றும் பிரிந்து வாழும் அம் சங்கள் இருத்தலின், அது கிராமத்தின் பொரு ளாதார நலத்தினே வளர்த்தற்கு ஏதுவாகாது.

இந்தியப் பொது மக்களின் சீர்கெட்ட நிலேக்கு ஜாதி முறைமையே நேர்காரணமாகும். மூட நம் பிக்கையும் அறியாமையும் குடிகொண்ட நிலேமை யும், மிக ஒடுங்கிய ஜாதியுணர்ச்சியால் வரும் குறு கிய மனப்பான்மையும் விரைவில் முதிர்ந்து வர லாயின. உயர்ந்த பொருள்களையும் நிலேயையும் அடையும் பேரவாவும், மிக உயர்வான தேசாபிமா னமும் முற்றும் மறையலாயின; கிராமத்தானுக் குத் தனது கிராமத்தின் நிலேமையைத் தவிரப் பிறி தொன்று தெரியாமலே ஒழிந்தது. கிராமத்தில் தக்க போக்குவரவு சாதனங்களின்மையும், கல்வி

கற்பித்தற்குத் தக்க வசதிகளின்மையும், கிராம வாசிகட்குப் பெருங்கேட்டினை விளைத்தன. பழைய காலத்தில் அரசாங்கத்தார் கிராமத்தில் நீர்ப் பாசன வசதிகளைப் பெருக்கியும் முக்கியமான கோவில்களை விருத்தி செய்தும் வந்தனர் என்பது உண்மையே. பழைய மன்னர்களிற் சிலர் கலை களையும் தொழில்களையும் இலக்கியங்களையும் ஆத ரித்துப் பேணி வந்தார்கள் என்பதற்கும் ஐய மில்லை. ஆனால் நாடுகளும் அரச மரபுகளும் நிலை யற்றவையாயிருந்தன; அரசியலின் நிலை மாறி மாறி வந்தமையின்; பொது மக்கட்கு மேலும் மேலும் பீடையும் துயரமும் மிகுந்து வரலாயின. வீரியம் மிக்க ஜாதியர்கள் படை யெடுக்கும்போது இந்திய கிராமம் அவர்களுடைய தாக்கினை எதிர்த்து நிற்க இயலாததாக விரைவில் ஆயிற்று. கோழைத் தனமும் கதியற்ற உணர்ச்சியும் உள்ளே நுழை யத் தொடங்கின. விரிந்து பரந்த நாட்டின் உணர்ச்சி ஒருக்காலும் தோன்றாது போயிற்று. ஜாதி முறைமை யென்பது வருங்காலத்தை எட்டி யோசித்த அரசியலறிஞரால் ஏற்படுத்தப்பட்டதோ என்பது ஐயத்திற்கு இடனாகின்றது. அம்முறை மையில் பெருகி வளர்தற்கு ஏதும் வசதியில்லை. கேடடைதற்கும் அழிவுக்கும் வேண்டிய அம்சங்கள் அனைத்தும் அதில் இருந்தன.

---

அத்தியாயம் 9

## பழைய இந்தியாவிற் பயிற்சியின் வளர்ச்சி



நகரங்கள் மேன்மையுற்று விளங்கின என்பதும், அரசர்களது ஆதரவின் கீழ் நகரங்களில் கலைகளும் தொழில்களும் ஓங்கின என்பதும், சான்றுகள் மூலமாக நமக்கு அறியக் கிடக்கின்றன. கிராமம் திட்டமாக இன்ன நிலைமையில் அந்நாளில் இருந்தது என்பது நம்மாற் சொல்ல இயலவில்லை; ஆயினும் ஜனத்தொகை இந்நாளில் இருப்பது போன்று, அந்நாளில் அவ்வளவு பெரிதாக இருக்கவில்லை என்பது தேற்றம். கிடைத்த ஆக்க மூலப் பொருள்களைக் கொண்டு அந்நாளில் பொது மக்கள் மிக்க ஆனந்தமாக வாழ்ந்திருத்தல் வேண்டும் என்று தோன்றுகிறது.

ஆனல் பொதுமக்கள், இக்காலத்திலிருப்பதை விட மிக்க நல்ல நிலைமையிலிருந்தனர் என்று கூற ஒண்ணுது. உயர்ந்த வகுப்பினர், சந்தேகமின்றிக் கல்வியின் பயனைப் பெற்று வந்தனர். ஆனல் அக்காலத்திருந்த தேவையை நோக்கும்போது,

பிராமணரும் ஆட்சி புரியும் வகுப்பினரில் சிலரும் ஒழிந்த மற்றையார்க்குக் கல்வி கற்றல் வாழ்க்கைக்கு இன்றியமையாதது என்னும் நினைவே எழுந்ததாகத் தெரியவில்லை. கல்வி கற்கும் அவசியம் கற்றற்குரிய தகுதி இவ்விரண்டின் இயல்பினாலேயே, கல்வி யென்பது ஒரு சிலர்க்கே தனியாகப் பாதுகாக்கப்பட்டும் ஒதுக்கி வைக்கப்பட்டும் வந்த தொன்றாயிற்று. பண்டைக் காலங்களில் (உதாரணமாக, உபநிடத காலத்து) கல்வி கற்க வேண்டிய எல்லை ஒவ்வொருவர்க்கும் பல ஆண்டுகளாயிற்று. புகழ் பெற்ற ஆசிரியர்களிடம் சிறப்பாக ஒரு துறையில் தேர்ச்சி பெறுதல் மிக அரிதாகப் பெறக்கூடியதாயும், அதுவும் குறிப்பிட்ட ஒரு சிலர்க்கே வாய்க்கக் கூடியதாயும் இருந்தது. புத்தமதக் காலத்துச் சில இடங்களில், மேன்மையுற்ற துறவிகள் அரசர்களானோரது சிரத்தையார்ந்த பேணுதலின் பயனாக, சித்திரம் சிற்பம் முதலிய ஓவியக் கலைகளும், மருத்துவம் தத்துவம் போன்ற முக்கியமான கலைகளும் வளர்ந்து வரலாயின.

ஆகக் கல்விக்கும் வயிற்றுப் பிழைப்புக்கும் யாதொரு தொடர்புமில்லாமலே இருந்தது. கல்வி

சுருங்கிய எல்லைக்குள் சிறுபான்மையார்க்கே உரிய தானமையின், தொழிற் பயிற்சியே நின்று நிலவலாயிற்று; சங்கம் ஒவ்வொரு தொழிற்கும் ஏற்படவே, அப்பயிற்சி எவ்விடத்தும் ஒரே மாதிரியாக் கப்படலாயிற்று. மக்களின் பொருளாதார நிலையே கல்வி முறைக்கு ஒரு வடிவமைத்தது; மதக்கல்வியும் அறிவுப் பயிற்சிக்கான கல்வியும் குருக்களாலும் முனிவர்களாலும் அளிக்கப்பட்டுவந்தன; உலகக் கல்வியும் பிழைப்பிற்குரிய தொழிற் கல்வியும் கலைப்பயிற்சியும் வீடுகளிலும் கடைகளிலும் தேர்ந்தவரது கண்காணிப்புக்குக் கீழ்ப் பல நாள் பழகுதலினலே எய்தப்பட்டு வந்தன.

ஆனல் பொதுமக்கள் கல்வி பெற்றவர்களாயிராவிடினும், அவர்கள் பலவகையாக அறிவு பெற்று வந்தார்கள். 1835-ம் ஆண்டில் புகழ்பெற்ற ‘ஆதாம்’ என்பார் வெளியிட்ட ஓர் அறிக்கை நமது கல்வியின் இந்த அம்சத்தைப் பற்றித் திட்டமாகவும் புகழ்ந்தும் பின் வருமாறு கூறுகிறது:—
“இந்தியாவில் கல்வியின் நிலைமையைப் பற்றி ஆராய்ச்சி செய்வதன் பயனாக நாம் அறிவது யாதெனில், அங்கே மக்கள் குறைவாகக் கல்வி

பெற்றுள்ளவ ரென்பதல்ல; நாம் கருதுவதைவிட அதிகக் கல்வியே பெற்றுள்ளனர்; பலரும் பொதுவாகக் கல்வி பெறுவதற்கும், தம்மிடத்துள்ளகல்வியைப் பரப்புவதற்கும் பாதுகாப்பதற்கும் தக்க நிலையங்களை ஏற்படுத்தியுள்ளனர்.'' ஒரு நூற்றாண்டுக்குப் பின் ஹார்டாக் சங்கத்தார் பின்வருமாறு தமது அபிப்பிராயத்தை வெளியிட்டுள்ளார்:—
"கல்வி யென்பது இந்தியாவில் வெளியிலிருந்து புகுத்தப்பட்ட ஒன்றல்ல'' "கல்வியிலுள்ள அவா அவ்வளவு காலத்துக்கு முன்னரே தோன்றியதும், அதனால் அவ்வளவு நிலையான பலமான ஒரு நல்ல மாறுபாடு உண்டாயதும், வேறு எந்த நாட்டிலும் இல்லை.''

இடையிடையே தாழ்ந்த குடிப் பிறந்தோர்க்கும் மிக உயர்வான பயிற்சியைப் பெறுதற்கு இயன்றது. இக் காரணத்திலேயே மஹாபாரதத்தில் வீர புருஷனாக விளங்கும் கர்ணன் பிறப்பால் செம்படவனே எனினும், தனது சுய வல்லமைகளின் துணையால் மிக உயர்ந்த ஒரு க்ஷத்திரியனது மதிப்பைப் பெறுதல் அவனுக்குக் கைகூடலாயிற்று. பல துறைகளிலும் மக்கள் இவ்வண்ணம்

தமது பிறப்பினுல் உண்டான வரம்புகளைத் தாண்டி மிக உயர்ந்த திறமையைப் பெற்றதற்குப் பல உதாரணங்கள் உள்ளன. இதற்குக் காரணம், ஆதாம் துரை கூறியபடி, பள்ளிக்கூடத்தில் கல்வி பெறுதலோடு அமையாது, மக்கள் வேறு வகை யாலும் அறிவுச் செல்வம் பெற்று வந்தனர் என்பதே; தொழிலாகக் கொண்டு நாடகம் நடிக்கும் கூட்டத்தாரும், கதைகளைப் பாடும் பாடகர்களும், ஹரிகதா காலக்ஷேபம் செய்பவர்களும் பிறரும் பழைய இந்தியஞானச்செல்வத்தைப் பாதுகாத்தும் பொதுமக்களிடையே பரப்பியும் போந்தார்கள்.

உடற்பயிற்சிக் கல்வி சம்பந்தப் பட்டவரை, மக்கள் பலம் பொருந்தியவரா யிருந்தனர் என்பது முன்னரே கூறப் பட்டுள்ளது. தொழிலியற்றும் அவசியத்தாலும், பகைவர்கள் படையெடுக்கா மலும் காட்டு விலங்குகள் உட்புகுந்து தீங்கு விளை யாமலும் பாதுகாத்துக் கொள்ளும் அவசியத்தா லும், மக்கள் தமது உடலை வலியுள்ள நிலைமையில் வைத்திருந்தனர். தமக் கருகாமையில் தமக்கு உதவி செய்ய முன் வரக்கூடிய ஒரு வல்லரசு இல்லாமையின், அவர்கள் தமது சமாதானத்தைத்

தாமே ஓம்பிக் கொள்ளவேண்டிய நிலையிலிருந் தனர். இக் காரணம் பற்றியே அவர்கள் பலமும் உடல் நலமும் உடையராய்த் திகழலாயினர். அள விற்கு மிஞ்சிய கட்டுப் பாடுகள் இல்லாமையாலே, அவர்கட்குள் ஒற்றுமை யுணர்ச்சி பெரிதும் வலி யுற லாயிற்று. ஜாதிமுறைமை அக்காலத்தும் இருந்ததாகக் கொண்டாலும், இன்றுபோல் அத் துணைக் கடுமையாகவும் குறுகிய மனப் பான்மை யோடும் நடைபெற்று வரவில்லை. தகுதி கூர்ந்து நிலையுயர்தற்கு அப்போது இடம் இருந்தது. விசுவா மித்திரரைப் பிராமணராக ஏற்றுக் கொள்ளுதல் இயலுவதாயிற்று. வசிஷ்டரும் வியாசரும் தாழ்ந்த பிறவினராயினும், அவர்கட்கு உயர்வடைவதற்கு இயன்றது. அரசாட்சி புரிந்த மரபினர் க்ஷத்திரிய ரது பதவியை எளிதாக எய்தினர்.

பொருளாதார நிலையினை நோக்குங்கால், கலை களும் தொழில்களும் அரசர்களது ஆதரவைப் பெற்று முன்னேற்ற மடைந்தன. மக்கள் தமக்கு வேண்டியிருந்த உடைகளைத் தாமே உண்டாக்கிக் கொண்டனர். தமக்குத் தேவையானவைகளைத் தாமே உற்பத்தி செய்துகொண்டு வந்தனர். இயந்

திர முயற்சியில் முன்னேற்றமே இல்லாதொழிந்தது. ஆனால் கைத்தொழில்கள் மாண்புமிக்க நிலையினை எய்தலாயின. ஜனத்தொகை சுருங்கியிருந்த காலத்துக் காரியங்கள் அனைத்தும் செவ்வனே நீடித்தகாலம் நடைபெற்றிருக்கலாம்; ஆனால் பின்னாளில் அருவருக்கத் தக்க கிளர்ச்சிகள் ஸமூகத்திற்குள்ளேயே தோன்றினமையாலும், வீரியம் மிக்க ஜாதியார் அயலிடங்களினின்றும் உட்புகுந்து மும்மரமாகத் தாக்கியமையாலும் மக்களது நிலை வரவரப் பொறுத்தற்கரியதாயிற்று.

---

## அத்தியாயம் 10

## சீரழிவு

---

இந்தியகிராமம் வரவரத் தனக்குள் தனக்கு வேண்டிய வற்றையெல்லாம் கொடுத்துக் கொண்டு தனியாக வாழ்ந்த கிராமமானபோது மக்கள், தாம் ஆபத்துக் கிடமின்றி வாழ்வதாகத் தவருக நினைத் துக் கொண்டார்கள். சுருங்கின ஜனத்தொகை எல்லேக் குட்பட்ட ஆக்க மூலப் பொருள்களைக் கொண்டு சந்தோஷமாகக் காலங்கடத்தி வரலாம்; ஆனல் ஜனத்தொகை நாளடைவில் அதிகமா தலும், கிராமத்தின் பொருளாதார நிலே மங்கலா யிற்று. ஜாதி முறைமை வளர்ந்து இறுகியமை யால், ஜனஸமூகம் பல கூறுக, ஜனங்கள் தமக்கு இயற்கைத் தகுதி இருப்பினும் இல்லாவிடினும் குலத்தொழில்களைக் கைவிட மாட்டாதவராயினர். ஜனத்தொகையின் பெருக்கத்தால், ஒருவர்க்கும் உரியதாகாத நிலத்தின் பரப்பு வரவரக் குறைந்து வரலாயிற்று; இதனல் ஜனநெருக்கம் மிகுந்தது. தீண்டாமை போன்ற விரும்பத்தகாத அம்சங்கள்

பஞ்சங்களாலும் கொள்ளை நோயாலும் பரவலாயின. உடல் நலம் குறையலாயிற்று. அறியாமையும் மூடபத்தியும் வளரலாயின. அரசியலில் ஒற்றுமையின்மையும், பழமையான நாடுகள் பல கூறுனமையும்; போர்களும், கொள்ளைகளும் சூறைகளும் மக்களது ஒழுக்கத்தைக் குலைத்து, அதைரியப் படுத்தின; நடுக்காலத்தில் (மத்திய காலத்தில்), பொதுப்படக் கூறின், இந்திய ஸமூகம் அருவருக்கத் தக்கதாயும் ஒழுக்கங் கெட்டதாயும் ஆயிற்று. புத்தரது உபதேசங்களினுல் துறவே இன்பசாதனம் என்னும் விசித்திரமான மதக் கொள்கை பரவத் தொடங்கலும், மக்கள் ஊக்கமிழந்தவராய்ப் பொருட் செல்வத்தைக் கவனியாதவராய்த் திரியலாயினர். ஆயினும், இவ்வளவு மாறுபாடுகட்கு இடையிலும் வரவர ஒரு பக்கம் ஜனத்தொகையைப் பெருக்கிக் கொண்டும், மற்ருெரு பக்கம் அறியாமையையும் வறுமையையும் வளர்த்துக் கொண்டும் வாழ்ந்து வந்தனர்.

பண்டைக்கால அரசர்கள் போக்குவரவுக்குரிய சாதனங்களை அதிகப்படுத்தியும், நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் உள்ள பழக்கத்தை முதிரச்

செய்தும் வந்திருப்பாரானல், புதுக் கருத்துக்களின் உட்பிரவேசத்தால் ஜாதி புத்துயிரைப் பெற்று நிற்பதோடு, நன்மை பயக்கும் ஒரு மூன் மாதிரி யைக் காத்து அளித்தும் இருக்கும். போக்குவர வுக்குரிய பாதைகளும் சாதனங்களும் இல்லாமை யால், முற்காலத்தில் பொது மக்களின் முன்னேற் றத்திற்குத் தடை ஏற்பட்டது. அயல்நாட்டுப் பிர யாணம் செய்தலே வரவரக் கண்டித்தும் விலக்கி யும் போந்தமை பொது மக்கட்கு ஒரு சாபமாகி, அவர்களேப் பலவாறு துன்புறுத்தியது.

நமது நாட்டின் காற்றை நுகர்ந்த மாத்திரத் தாலே, நாட்டிற்குட் புகுந்த வீரியம் மிக்க ஜாதி யரும் வரவர அதன் மயக்கத்திற் குள்ளாகி, தமது சிறப் பியல்புகளேயும் விரைவில் இழந்து, இந்தியப் பொதுஜனங்களோடு ஒன்றுபட்டு விடலானர். சீர் திருத்த முறைகளேக்கண்டு பிடித்தற்கும் ஆராய்ச்சி செய்தற்கும் வசதியின்மையும், அனேவரும் ஒன்று கூடிக் கல்வி கற்றலும் சிந்தித்தலும் இல்லா மையும், அறிவு நூலிலும் கலேகளிலும் தொழில் களிலும் முன்னேற்றமடைவதைத் தடுத்து வந்தன. பஞ்சமும் கொள்ளே நோயும் தொற்று நோயும், தத்

தமக்குரிய மக்களுயிர்க் கட்டணத்தை மிகுதியா கவே பறித்துச் சென்றன. ஆதலின் ஆங்கிலேய ரது ஆட்சிக்கு முன்பு கிராமங்களின் நிலை மிக நன்றாயிருந்தது என்னல் சரியாகாது. கிராமங்கள் ஒருங்கு சேர்ந்து ஒன்றோடொன்றுஇணைந்து அழி யாமல் இருந்தன என்பதைப் பற்றியும் ஐயம் இல்லை. இவ்வாறு சீரழிந்து வந்தபோதிலும், கிராம வாழ்க்கை முறையிலுள்ள ஓர் உயிர்ச்சக்தி அதை உயிரோடிருக்கும்படி செய்து வந்தது. ஆங்கிலேயரது ஆட்சி கிராம ஸமூக ஒழுங்கை அதிகமாக மாறுபடுத்தாது அப்படியே போற்றி வந்தது. அந்த ஸமூக அமைப்பு மிக்க சௌகரிய முள்ளதாய், வெளியிலிருந்து ஒன்றை நாடாது தானே தனக்கு எல்லாமாகும் தன்மையுள்ளதாய், அதனினும் சிறந்த தொன்றை அதற்குப் பதி லாக அமைத்தற்கு அரியதாம்படியும் இருந்தது.

கிராமத்தார் தமக்கென ஒரு கிராம ஆட்சி முறையையும் உடையராயினர். அவர்கள் தமது சொந்தக் கல்விச்சாலைகளை நடத்திவந்தனர். தமக்கு வேண்டிய உணவுப் பொருள்களைத் தாமே உற் பத்தி செய்து கொண்டனர். தமது பஞ்சை நூற்று

ஆடை நெய்து கொண்டனர். கிணறுகள் தோண்டிக் குளங்களை வெட்டினர். அரசனுக்கும் காலமுறைப்படி திறை செலுத்திவந்தனர். அவ்வளவு எளிதான ஓர் கிராம அமைப்பினை எந்த அரசாங்கம்தான் விட்டுவிட நினைக்கும்? மிகப் பழைய காலமுதலே அரசாங்கத்தார் தமது நாட்டின் ஆக்க மூலப்பொருள்களைப் பெருக்குவதில் கவலையுடையவராகவே இருந்துள்ளனர். பண்டைக்கால இந்திய மன்னர் கோவில்களின் முன்னேற்றத்தைக் கவனித்துவந்த காரணமாவது, யாத்திரீகர்களை அவற்றை நோக்கித் திரள் திரளாக வருமாறு செய்து, காணிக்கைகளை வசூலித்து அவ்வாயிலாக நாட்டின் செல்வத்தை அதிகப்படுத்துதலே. நீர் பாய்ச்சுதற்கு வேண்டிய வசதிகளை அவர்கள் மிகச் செய்தநோக்கம், அதிக நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டுவரும்படி செய்து, அவ்வழியால் நாட்டின்செல்வத்தை விருத்திபண்ணக்கூடும் என்பதே. மற்ற விஷயங்களில், ஆங்கிலேய அரசாங்கம் வரும் வரை, பொது மக்கள் தம்மைத்தாமே பேணிக் கொள்ளும்படி விடப்பட்டனர்; ஆங்கிலேயரது ஆட்சியே பிற்காலத்துப் புதுக் கருத்துக்களையும்

புதிய இலக்ஷியங்களையும் கொணர்ந்து, நமது பண்டைய நிலை அமைதியுள்ளதாயினும் அவ்வளவு விரும்பத்தக்கதா யிராதகாலத்து, ஓர் அற்ப அளவிற்கேனும் ஒரு கிளர்ச்சியை உண்டுபண்ணலாயிற்று.

---

## அத்தியாயம் 11

## ஆட்சி முறை

---

இந்நாட்டை ஆண்டவர்களது கவன முழுவதும், கிராமக்காரியங்கள் சம்பந்தப்பட்டவரை, முற்கூறியபடியே, கிராமத்திலிருந்து அரசாங்கத்திற்கு வரி வசூலாகவேண்டும் என்பதொன்றுதான். வசூலைப்பற்றிய விவரங்கள் பெரும்பாலும் கிராமத்தாரது பொறுப்புக்கே விடப்பட்டன. கிராமத்தின் உள்ளாட்சி முறையினைக் கிராமத்தார் தம்மாலியன்ற அளவு செவ்வையாக நடாத்தும் பொருட்டு அவர் வசமே அது ஒப்புவிக்கப்பட்டது. அரசாங்க உத்தியோகஸ்தர் தொகை சுருக்கமாயிருந்தது. அவர்களும் ஒருவர்க்கொருவர் வெகு தொலையில் இருந்தனர். அரசாங்கத்தார் பெருவழக்குகளையே தீர்க்க ஏற்றுக் கொண்டனர்; ஆனல் சாதாரண சில்லறைக் காரியங்களைக் கிராமத்தார் தாங்களே முடிவு பண்ணிக்கொள்ள வேண்டியிருந்தது.

மகமதியர்களே பொருள் வழக்குகளைத் தீர்க்கும் நீதிமன்றங்களை நிறுவினர் போலத் தோன்று

கிறது; அந் நீதித்தலைவர்கள் முக்கியமான ஊர்களிலேயே அமர்த்தப்பட்டார்கள். எவ்வாருயினும், அதிகாரியின் இருப்பிடம் வெகுதொலையில் இல்லை. அரசாங்கம் இன்றுகாணப்படுவது போல, அன்று ஒவ்வொன்றிலும் தனது ஆட்சியைச் செலுத்தவில்லை என்று பொதுப்படக் கூறலாம். ஆனல் பண்டைக் காலத்திலும் குப்தராது அரசாட்சிக் காலத்திலும், ஒருவாறு பிற்காலத்து மகம்மதிய அரசரது ஆட்சிக்காலத்திலும் ஒருக்கால் இதற்கு விலக்காக இருக்கலாம். இக்காரணத்தினலேயே, ஆட்சிமுறை அமைப்பும் சமாசாரப் போக்குவரத்தும் இல்லாதிருந்தும், கிராமத்தார்க்குத் தமது தேவைகளை உயர்ந்த அரசியல் அதிகாரிகளிடம் தெரிவிப்பது எளிதாயிருந்தது.

ஆக, கிராம நிலையைச் சீர்திருத்துவதற்காக நேராக யாதொரு முக்கியமான காரியமும் நடைபெறவில்லை.ஒரோவழி ஒரு சில நீர்ப்பாசன வேலைகள் இயற்றப்பட்டன எனினும், அவ்வேலைகளைப் பழுதடையாது பாதுகாக்கும் பொறுப்புக் கிராமத்தார்க்கே விடப்பட்டது. கிராம வசூலிலிருந்து கிராமத்தார் கிராமப் பொது நன்மைக்காக ஒரு

பகுதியை ஒதுக்கிவைப்பார். இப்பொதுப் பணமே கிராமத்தாரது சௌக்கியங்களை விருத்திசெய்வதற்கும், அரசியலதிகாரிகள் இடையிடையே கிராமத்திற்கு வருங்கால் ஏற்படும் அவசியமான செலவுக்கும் பயன்படுத்தப்பட்டது.

கிராமப் பொதுப்பணம் சற்றுச் சமீபகாலம் வரை சில கிராமங்களில் இருந்தது. ஆனால் ஆங்கில அரசாங்கத்தாரால் ஏற்படுத்தப்பட்ட ஆட்சி அமைதி முறையும், கிராம ஆட்சியை விவரமாக நிலவரி அதிகாரிகள் அடிக்கடி மேற் பார்த்து வந்தமையும், அதில் பணம் வசூலித்தலைத் தடுத்தற்கு ஏதுவாயின; பொதுப்பணம் சேர்க்கும் முறையும் அதோடு நின்றுவிடுதல் அவசியமாயிற்று.

---

## அத்தியாயம் 12

## ஆங்கிலேயரது வருகை



இத்தகைய பழக்க வழக்கங்கட்கு நடுவே ஆங்கிலேயர் அரசாட்சி புரிய வந்தனர்; அவை யனைத்தையும் அப்படியே இருக்குமாறு விட்டு வந்தனர். கிராம ஆட்சி முறையில் ஒவ்வொரு அற்ப விஷயத்திலும் அதிகாரவர்க்கத்தினரின் தலையீடு முற்ற முற்ற, கிராமத்தார் தாமாக ஒன்றை இயற்றுதல் இயலாது போயிற்று. குடியானவர்கள் சர்க்காருக்கு நேரே தீர்வை செலுத்தும் முறையும், அதனால் சர்க்கார் ஒவ்வொரு குடியானவரோடும் நேரே பழகத்தொடங்கிய முறையும் புகுத்தப்பட்டதினால், நன்மைகளும் தீமைகளும் உண்டாயின. சிறுபான்மை ஸமூகங்கள் இதன் பயனாக உயர்ந்த ஜாதியார்க்குள் பொருளாளரா யிருந்தவர்களது பலமான அடக்குமுறைக் குட்பட்டிருந்ததினின்றும் விடுதலை பெற்றன. பொதுமக்கட்குத் தாம் உட்பட்டிருந்த நெடுங்கால ஸமூகக் கொடுங்கோன்மையினின்றும் வகுப்புக் கொடுமையினின்றும் உய்

வடையும்பொருட்டு அரசாங்கத்தாரது உதவியை எதிர்பார்க்கும் துணிவை அளித்தது. முற்கூறிய முறை ஏற்பட்டபின், பொருள் பறிக்கும் இயல்பும் பெரும்பாலும் அறியாமையும் நிறைந்த, ஒரு சில கிராமத்தாரது ஆட்சியின் கையினின்றும் தப்பிப் பிழைத்தோம் என்ற உணர்ச்சி பொது மக்களி டையே பொங்கி யெழுந்தது. இது தக்க காலத்தில் தோன்றியது என்பதைப் பற்றி ஐயமில்லை; ஏனெ னில், பிற்காலத்துப் பொதுமக்கள் தமது உரி மையை வற்புறுத்தத் தொடங்கியது இதைப் பொறுத்ததாகவே இருந்தது.

ஆனல் இது பழமையான பொது உணர்ச் சியை அழித்து விட்டது. ஆட்சி முறையை நடத் தற்காக அரண்மனைக் கருவூலச் செலவு மிகுந்து வந்தமையும், தலை நகரங்களை மேன்மைப்படுத்தும் பொருட்டு அரசாங்கம் மேன்மேலும் முயன்றுவந் தமையும், ஆங்கிலேயர் வந்த பின்பும் தலைமை யான ஓரிடத்திலிருந்தே ஆட்சிமுறை பொதுவாக நடத்தப்பட்டு வந்தமையும், பெரும்பாட்டைகளையும் இருப்புப்பாதைகளையும் சீராக்கும் அவசியமும், அயலார் படையெடுக்காதபடி வெளி நாடுகளோடு

சமாதானமான வாழ்க்கை நடத்தும் அவசியமும், கிராமத்தாரது சுகங்களுக்காகச் செலவழித்ததற்குப் பணம் மீதிவைக்க இடமில்லாது போகும்படி செய்தன. ஓர் ஒழுங்கான அமைப்பு மூலம் கல்வி கற்பிக்க ஏற்பாடு செய்யப்பட்டது; ஆயினும் அது கட்டாயக் கல்வி யாகாது, மக்களின் பிரியத்திற்கு விடப்பட்ட தொன்றாயிற்று. பள்ளிக்கூடங்களும் உபாத்தியாயர்களும் குறைவாயிருந்தமையின், இத்துறையில் மிக்க முன்னேற்றம் உண்டாக்க வழியில்லை. மேற்றிசை மருத்துவ முறைப்படி மக்கட்கு நோய்தீர்த்தல் பணச் செலவை அவாவியிருந்தமையால், கிராமப் பொதுமக்கள்வரை அவ்வுதவி சேர முடியாததாயிற்று.

ஆனாலும் ஆங்கிலேயரது வருகைக்குப் பின் கல்வி கற்பிக்க ஒழுங்கான ஓர் அமைப்பும், நோய் தீர்க்க மருந்துகளை உதவும் ஏற்பாடு ஒன்றும், தனித்தனி வகுப்பினரும் பொதுஜன ஆரோக்கியமும் சீர்திருந்துதற்கு ஓர் ஊக்கமும், நீதியும் ஒழுங்கும் பொது ஆட்சியும் ஆகியவைகளில் முன்னினும் உயர்ந்த மேலானதொரு முறையும் நாட்டிற் புகுத்தப்பட்டன. இவ்வாறு ஆங்கிலேய அரசாங்

கம் கிராமப் பொது மக்கட்கும் பற்பல தற்கால சௌகரியங்களை அளிக்க முயன்று வந்தது.

ஆனால் இம் முயற்சிகள் பல காரணங்களினால் பயன்படாது போயின. மக்களது நிலைமை இருந்தபடி, எவ்வளவு முறையிட்டாலும் அவர்கட்குப் புத்திமதி சொன்னாலும், தங்களது நிலைமையைச் சீர்திருத்திக் கொள்வதில் அவர்கட்குச் சிரத்தையே இல்லாதிருந்தது. ஸமூகச் சீர்திருத்த விஷயத்திலோ, அரசாங்கத்தார் மதவிஷயத்திலும் ஸமூக விஷயத்திலும் தலையிடுவதில்லையென்ற கொள்கையைக் கண்டிப்பாக அனுசரித்து வந்ததினாலும், முன்னிருந்த நிலைமையை மாற்றாது தீவிரமாகப் போற்றியும் ஆதரித்தும் அவர்கள் வந்தமையாலும், கேட்டை விளைக்கும் ஜாதி முறைமையின் கடுமையைத் தணித்து மாற்றுதல் இயலாது போயிற்று; அம்மட்டோ! அம்முறைமை சட்டத்தாலும் அரசியலமைப்பாலும் தீங்கின்றிப் பாதுகாக்கப்பட்டும் வரலாயிற்று.

---

அத்தியாயம் 13

## சீரழிவின் காரணமும் அதற்குப் பரிகாரமும்

---

இப்பழமையான ஸமூகத்தைச் சீரழியச் செய்த காரணங்கள் யாவை? அனைத்திலும் முதன்மையானது, கேடு விளைவிக்கும் ஜாதி முறையே. அது நமது ஸமூகம் நன்னிலையில் அபிவிர்த்தியடைந்து வருவதை நசுக்க வெகு சிரமப்பட்டுள்ளது; தலைகீழாக்கும் புரட்சி நெறியைத் தவிர அதற்குக் குறைந்த வேறொன்றும் இந்தக் கெட்ட ஜாதி முறைமையால் விளைந்த ஊறுபாடுகளைத் தீர்த்தற்கு உதவமாட்டாது என்று கருதும்படிக்கும் தற்போதைய நிலை உள்ளது. இதுவே எவ்வகைப் பிரிவுக்கும் தகுதியைப் பாராட்டாமைக்கும், சொந்த அறிவைக் கொண்டு முயலும் உணர்ச்சியையும், பிறரைச் சாராது தாமாக ஒரு காரியம் செய்யும் இயல்பையும் கொன்றதற்கும், அறியாமை, மூடபக்தி, அழுக்கு, நோய் இன்னும் இவைகளின்பயனாக உண்டாகும் மற்றவை ஆகிய அனைத்திற்கும் நேர் காரணமாயிற்று.

போதிய அளவிற்கு வெளியுலகத்தாரோடு பழகாமையும் ஒன்று. இத்தகைய பழக்கம் ஒன்றே ஒருவர்க்கொருவர் நலந்தரும் போட்டி போடும்படியான உணர்ச்சியை எழுப்பும், புதுக் கருத்துக்களை நமக்கு இயைந்தவாறு அமைத்துக் கொள்ளும்படித் தூண்டும். இன்னும், பொதுமக்களின் கல்வியறிவின்மை யொன்றையும் வெல்வது அவசியமாகின்றது. இறந்தொழிந்த கிராமத்தொழில்களையும் கலைகளையும் மீண்டும் உயிர்த்தெழச் செய்தலும், பெருங் கைத்தொழில்களைக் கிளப்புதலும் அவசியமாகின்றன. கிராமங்களில் போக்குவரவுக்குரிய வழிகளைத் திருத்துதலும், விவசாயத்தில் செம்மையான முறைகளைப் புகுத்துதலும், பொருள்களைப் பல இடங்கட்கும் பரப்புதற்கு மிகச் சிறந்த முறைகளை அளித்தலும், உடல் நலந்தரக்கூடிய கிராம விளையாட்டுகட்கும் உடற்பயிற்சிகட்கும் போதிய வசதிகளை அளித்தலும், அன்னிய நாட்டுப் பிரயாண வாயிலாகத் தற்காலக் கருத்துகளைப் புகட்டுதற்கு வேண்டிய உதவிகளும், தற்கால வாழ்க்கையையும் தேவைகளையும் சித்திரித்துக் காட்டும் 'அசையும் படக்காட்சி'களும் - இவை

களே தற்போதைய இந்தியப் பொதுமக்களின் தேவைகளும் குறைகளுமாம்.

தேவைகளோ மிகப் பல; வேலையோ மஹத் தானது; இப்போதுள்ள ஜன ஸமூக சமனிலை குலையாதபடி இத்தனை இலக்ஷியங்களையும் எப்படி அனுபவத்திற்குக் கொண்டுவரக் கூடும்? ஜாதி முறைமை போனலொழியத் தீண்டாமை ஒழியாது; ஏனெனில் ஜாதிவிலக்கம் என்பது ஜாதி முறைமையின் நேர் பயனுகத் தோன்றிற்று. இவ்விஷயத்தில் சீர்திருத்தம் யாதேனும் செய்ய முயலுதல் பயனற்றுப் போவது அனுபவத்தால் பெறப்பட்டுள்ளது. அரசாங்கம் இம் முறைமையில் நேராகத் தலையிடத் தயங்கும்; ஆனல் சீர்திருத்த முயற்சியை அரசாங்கமே ஒருவாறு தொடங்குதல் இந்து மக்களின் உடைவைத் தடுக்கப் பெரிதும் பயன்படும்.

இது செய்யப்படாவிடில், நாம் ஒரு ஸமூகமாகத் தற்கால உலகத்து வாழும் உரிமையை இழக்க நேரிடும். இந்திய ஸமூகம் தன்னைத்தானே சீர் திருத்திக்கொள்ளல் வேண்டும், அல்லது தன்னையே

முடித்துக்கொள்ளல்வேண்டும். உய்யும் வழி நமது கைக்குள்ளேயே பெரும்பாலும் உள்ளது. தங்கட்கு அழிவை விரைவாக உண்டுபண்ணிக்கொண்டுவரும் ஒரு முறைமையைப் போற்றி வருவதனுல் என்னென்ன மிகப் பெருங் கேடுகள் விளைய நிற்கின்றன என்பதை உணரும்படிப் பொது மக்கட்குப் புத்தி புகட்டவேண்டும். இந்த நோக்கத்தை நிறைவேற்றுமாறு கல்வியளிக்கும் முறையைப் புதிதாக மாற்றி அமைத்தல் வேண்டும். அரசாங்கத்தார் ஜனங்களோடு உத்தியோக முறையிற் பழகும் போது ஜாதிப் பிரிவையும் உட்பிரிவையும் பொருட் படுத்த மறுத்தல் வேண்டும். இன்றேல் ஒவ்வொரு சாக்ஷியும் நீதி மன்றத்தில் பெட்டி யேறியதும் தன் ஜாதியையும் அதின் உட்பிரிவையும்கூறக் கடமைப் பட்டுள்ளான்; ஜாதியை அனுபவத்தில் விட்டவர் களும் அதில் நம்பிக்கையில்லாதவர்களும் தமது ஜாதியையும் உட்பிரிவையும் சொல்லும்படிக் கேட் கப்படுகின்றனர். இவையெல்லாம் ஒழிதல் நல மன்றே?

இதுவரை நாடகங்களும் அசையும் படக் காட்சிகளும் தென்னிந்தியாவில் பழைய புராணப்

பயிற்சியைப் பரப்புவதிலேயே கவனஞ் செலுத்தியுள்ளன; இப்பயிற்சியோ பொதுமக்களது நெடுங்கால மூடநம்பிக்கைகளைக் குலையாமற் பாதுகாக்க உதவுகிறது. ஆதலின் அரசாங்கம் இவைகட்கு அனுமதிகொடுக்கும் அதிகாரத்தை உபயோகிக்கும்போது, எல்லா அசையும் படக்காட்சி தயாரிப்போரும் ஒரு சில ஸமூக வாழ்க்கைப் படங்களையும் நாடகங்களையும் இயற்றவேண்டும் என்று வற்புறுத்தலாம். இம்மாதிரியாகச்சுற்றுவழியிலாவது அரசாங்கம் ஸமூக அமைப்பை மிக்க நலம் விளைப்பதற்குரிய முறையில் திருத்தியமைப்பதற்காகத் தலையிடலாம். இன்னும், கல்வி கூட்டுறவு வைத்திய உதவி, சுகாதாரம், கைத்தொழில் விவசாய அபிவிருத்தி ஆகிய துறைகளிலும் அரசாங்கம் செய்யவேண்டியது மிகுதியாக உள்ளது.

கிராம முன்னேற்றத்திற்காகத் தனியாக ஒரு பகுதியை (இலாகாவை)ப் புதிதாக ஏற்படுத்துவதும் முற்கூறியவற்றால் அவசியமாகின்றது. பொது மக்கள் தாமாக முயற்சி செய்யட்டும் என்று விட்டுவிடுதல் ஒழுங்கல்ல. எல்லாத் துறைகளிலும் அரசாங்கமே முதல் முயற்சியைச் செய்தல் வேண்டும்.

இப்பகுதிக்குப் போதுமான நிதி கைவசம் ஒப்பு விக்கப் படல்வேண்டும். இது நேராகக்கிராமத்தா ரோடு காரியங்களை இயற்றுதல் வேண்டும். ஆனால் இதைச் செய்தற்கு முன் அரசியலாரின் பற்பல பகுதிக்காரரும் பல கிராமங்களிலும் கிராமத் தொகுதிகளிலும் தேவைகள் இன்னின்ன என் பதை முன்னதாகவே ஆராய்ந்தறிந்து, இதுவரை கிராமத்தார் பெற்றுள்ளவை இவையிவை யென் றும் இனிப் பெறவேண்டியவை இவையிவை என் றும் கணக்கிட்டறிதல் வேண்டும்; பின்னர் தமது ஆராய்ச்சியின் முடிவுகளைப் புதிய பகுதியினரிடம் உதவியாயிருக்குமாறு ஒப்புவித்து விடுதல் வேண் டும். கைத்தொழிற் பகுதியார் பற்பல இடங்களில் என்னென்ன கைத்தொழில்களை வளர்க்கலாம் என்பதைப் பொதுப்படக் கூறலாம்: கூட்டுறவுப் பகுதியார் பற்பல கிராமங்களில் என்னென்ன மாதிரியாகக் கூட்டுறவு முறைப்படி கடன்கொடுக் கலாம்,தொகையைப் பிரித்துக் கொடுக்கலாம் என் பதையும், பொது மக்கட்கு நன்மை விளையும்படி என்னென்ன வகைகளில் கூட்டுறவு முறையை நடத்தலாம் என்பதையும் எடுத்துக் காட்டலாம்.

விவசாயப் பகுதியார் பொது ஆரோக்கியப் பகுதியாரோடு ஒத்துழைத்து, ஆங்காங்கே கிடைக்கும் மூலப் பொருள்களைக் கொண்டு, பொதுமக்கட்கு ஆரோக்கியமான உணவை அளித்தலும் நிலச் சாகுபடியினுல் மிக்க ஊதியம் பெறுதலும் உறுதியாகுமாறு, இன்னின்ன பயிர்களை உண்டாக்கலாம் என்பதை எடுத்துக் காட்டல் பயன் தருவதாகும். பொதுமக்களது அறிவின்மையைப் போக்குதற்குத் தற்கால முறைகள் இன்னின்னவற்றைக் கையாளலாம் என்று கூறலாம். ஆனுல் புதிய பகுதியார் சுருங்கிய கால அளவிற்குள் எல்லாத் துறைகளிலும் பொதுமக்களது மேலெழுச்சியைத் தடையற உண்டாக்குதலையே தமது நோக்கமாகக் கொள்ளல் வேண்டும்.

---

## அத்தியாயம் 14

## முன்னேற்றக் கருத்துக்கள்

---

பொது மக்களது உள்ளத்துத் தமது தற்போதைய நிலைமையில் அருவருப்பும், தற்கால முறைக் கேற்ப முன்னேறுதலில் ஓர் அவாவும் எழுப்பப் படுதல் வேண்டும். இந்த மிகப்பெரிய சங்கடத்தினின்றும் உய்வடைய வேண்டுமாயின், முதன் முதலாக இன்றியமையாதது இதுவே. ஆனல் இதை எவ்வாறு கைகூடச் செய்வது? பிரசாரகர்கள் மூலமாகப் பொது மக்கட்குக் கல்வி புகட்டும் முறை யொன்றினலேயே இது இயலும். இளைஞர் மூலமாகப் படிப்படியாகப் பொது மக்கட்குக் கல்வி புகட்ட முயலுதல் என்ற முறையைச் சோதித்தாய்விட்டது, அது அவ்வளவு வெற்றியளித்திருப்பதாயில்லை. கிராமத்திலுள்ள அறிவின்மையை மட்டுமல்ல, பெரும்பாலும் கிராமத்தின் சீர்கேட்டைத் தொலைத்தற்கும், துருக்கி தேசத்தில் எல்லா மக்களையும் சில வாரங்கட்குள் இன்றியமையாத சில விஷயங்களைக் கற்றவராக ஆக்குதற்

பொருட்டுக் கையாளப்பட்ட முறையே சிறந்ததா கும். இம்முறைப்படி, ஒவ்வொரு கிராமத்திலும் சில நாள்கட்குத் தொடர்ச்சியாகப் பொது மக்க ளைக் கூட்டிச் சில விஷயங்கள் போதிக்கப் பட் டன. அக்கூட்டங்கட்குப் போதல் எல்லார்க்கும் கட்டாயமாக்கப் பட்டது. கல்வியைப் பற்றிய ஆரம்பக் கொள்கைகளைத் தெரிந்து கொள்ளுதலே போதும்; ஆனல் தற்காலத்துப் பொது மக்களைத் துன்புறுத்திக் கொண்டிருக்கும் அறியாமை, அசுத் தம், நோய் இவைகளை எடுத்துக் காட்டிப் பகிரங் கப் படுத்தும் கருத்துக்களை அதே சமயம் புகுத்து தல் வேண்டும்; மேலும் அவர்கள் தற்காலக் கருத் துக்களையும் விரிவான நோக்கங்களையும்தமது தின சரி வாழ்க்கையில் கையாளும் அவசியத்தை உண ரும்படி செய்தல் வேண்டும்.

தற்கால உயர்ந்தகருத்துக்களைப் பொது மக்க ளது உள்ளத்துப் புகுத்துதற்கு அசையும் பட முறையையும் நாடகமாடும் முறையையும் பயன் படுத்துதல் வேண்டும். ஒவ்வொரு கிராமத்தும், பொது ஜனங்களது நன்மைக்காக இனிய நாடகங் களும் அசையும் படக் காட்சிகளும் நடைபெறும்

பொருட்டு ஒரு கட்டடம் அமைத்தல் வேண்டும். கலையழகு பொலியும் நாடகங்களையே தேர்ந்தெடுத்தல் வேண்டும் என்பதல்ல; தற்கால நாகரிகம் விளங்கும் நாடுகளிற் காணப்படும் உயர்ந்த வாழ்க்கை முறைகளையும் வாழ்க்கைத் திட்டங்களையும் அறிவுறுத்துதற்காகவும், பழைய நெறிகளிலேயே தொடர்ந்து சென்றுகொண் டிருப்பதினல் மக்கட்கு விளையும் ஆபத்தை உணர்த்துதற்காகவும், தக்க நாடகங்களைத் தேர்ந்தெடுத்தல் வேண்டும். இக்காரியங்களைக் கண்காணித்து வரும் பகுதியாரது ஆதரவின் கீழ், சீர்திருத்த முறைகளை விளக்கிக் காட்டும் நாடகங்களைச் சிறப்பாக இயற்றி அவைகளைப் பயன் படுத்த வேண்டும்.

ஜாதிகளும் வகுப்புகளும் ஒன்றோடொன்று மணம் புரிந்து கொள்ளுதற்குத் தடையாயிருப்பன யாவும் நீக்கப் படவேண்டும்; ஜாதியை அரசாங்கக் காரியத்தில் ஒரு பொருளாகக் கொள்ளக் கூடாது. ஆரம்பக்கல்வி கட்டாயமாக்கப் படல் வேண்டும். முன்னேற்றம் தரும் தற்கால இலக்ஷியங்களைச் சிறுவர்கட்கும் சிறுமிகட்கும் முக்கியமாகக் கற்பித்தல் வேண்டும். ஜாதித் தனி உரிமை

ஒவ்வொருவரது தனி உரிமை என்னும் இலக்ஷியங்களுக்குப் பதிலாக உயர்வான-பொதுவான சகோதரத்வக் கொள்கைகளைப் புகட்டுதல் வேண்டும். கிராம சுகாதாரக் கொள்கைகளையும் உடல் நல வாழ்க்கைக் கொள்கைகளையும் இளைஞரது மனதிற் புகுத்த வேண்டும்; மதக் கொள்கைகட்குரிய ஊக்கத்தோடு இக்கொள்கைகளைச் சிறுவர்களும் சிறுமிகளும் விடாது பின் பற்றும்படிச் செய்தல் வேண்டும். உண்மையைக் கூறுங்கால், இப்போதுள்ள முறையினின்றும் வெளிப்பார்வைக்கு அரும்புவதும், ஆனல் அம்முறை வளர்த்தும் பெருக்கியும் வந்துள்ள நச்சுப்பயிர்களை அறவே களைய முயலுவதுமான ஒரு புதிய கொள்கையை ஒரு புதிய மதத்தைப் பொதுமக்க ளிடையே ஊட்டுதற்கு முயற்சி செய்தல் வேண்டும்.

ஆனல் இதைவிட மேலான முறையாகத் தோன்றுவது யாதெனில், கிராமத்தார்களிலிருந்து பொறுக்கியெடுக்கப்பட்ட சில இளைஞர்களை அன்னிய நாடுகட்கு அனுப்பும் முறையே. தேர்ச்சி பெற்றவர்களது துணையோடு அன்னியநாடுகட்கு இளைஞர் குறிப்பிட்டகாலங்களில் பிரயாணம்

செய்ய ஏற்பாடு செய்தல் வேண்டும்; கிராமத்தார்களிற் பலர் ஐரோப்பா அமெரிக்கா தொலையிலுள்ள கீழை நாடுகள் இவைகட்குச் செல்லும்படிக்கும், அந்நாட்டினரோடு பழகும் படிக்கும் ஊக்கமூட்ட வேண்டும். இந்தியக் கடல்களிலே ஓடிக்கொண்டிருக்கும் நீராவிக் கப்பல்கட்கு உரிமையாளரான சங்கத்தாரைச் சகாயக் கட்டணத்திற்கு இத்தகைய பிரயாணங்களை ஏற்பாடு செய்யுமாறு வேண்டிக் கொள்ளலாம்.

மேலும், பல்கலைக் கழகத்துப் பட்டம்பெறுவோர் ஒவ்வொருவரும் தமது கல்வி முற்றுப் பெற்றதும், குறிப்பிட்ட காலத்திற்கு, ஒரு வருஷத்திற்கோ அல்லது குறைந்தது ஆறுமாதத்திற்கோ, தெரிந்தெடுக்கப்பட்ட சில கிராமங்களில் வாழ்ந்தாலன்றிப் பட்டம் பெறுதற்குரிய தகுதி முற்றுப் பெறாதென விதிக்கப்படல் வேண்டும். ஒரு ஜில்லாவிலிருந்து மற்றொரு ஜில்லாவிற்கும், ஒரு இராஜதானியிலிருந்து மற்றொரு இராஜதானிக்கும், பிரயாணஞ் செய்யும்படி மக்கள் தூண்டப்படவேண்டும். எல்லா முக்கியமான தலங்களிலும் பிரயாண காரியாலயங்கள் அமைக்கப் படவேண்டும். இவ்

ஏற்பாடுகட்குத் துணை புரியுமாறு இயன்றவரை கட்டண சகாயங்களை அளிக்கும்படி இருப்புப் பாதை அதிகாரிகளை அணுகி வேண்டிக்கொள்ள வேண்டும்.

இத்தகைய கருத்துக்களும், உபாயங்களும் எமது உள்ளத்து எழுபவைகளிற் சிலவாகும்; இவைகளில் வல்லாட்சியின் வாசனை ஒருவாறு தென்படுமாயினும், நாம் விரும்பும் பயன்களை எய்துதற்கு ஓரளவிற்கு அடக்கு முறையைக் கையாள வேண்டியதும் இன்றியமையாததென்பது திண்ணம்.

---

## அத்தியாயம் 15

## இந்தியாவில் கல்விமுறையின் சரிதம்

---

பழமையான இந்தியாவில் கல்வியின் நிலைமை இவ்வாறிருந்ததென்பதை முன்னரே குறித்துள்ளோம். முறையாக அமைக்கப்பட்ட கல்வி நிலயங்களது தொகை பெரிதல்ல. பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலாவது கல்விச் சாலைகளில் உள்ள ஆசிரியர்கள் ஊதியங் குறைந்தவர்களா யிருந்ததோடு அதேயளவிற்குத் தகுதியும் குன்றியவர்களா யிருந்தனர் என்று கூறுதற்கு ஆதாரங்கள் நமக்குக் கிடைக்கின்றன.

மிகப் பழைய காலத்து இந்திய மாதர்க்கு மிக உயர்ந்த கல்வியும் மறுக்கப்படவில்லை யென்பதற்கும் சான்று பெறப்படுகின்றது. கோக்கலே என்ற பெரியார் கூறுகிறபடி, வேதகாலத்தில் (அதாவது நமக்கு ஆதரவுகள் மூலமாக விளங்கும் மிகப் பழமையான காலத்தில்,) சுமார் ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்பு, தூய மந்திர மொழிகளைப் பரவச நிலையிலிருந்து கண்டு வெளியிட்டவர்க்குள் மாதரும்

சிலர் இருந்தனர். ஹார்டாக் கழகத்தார் தமது அறிக்கையில் குறிப்பிட்டிருப்பதாவது:— "இந்தியாவில் மாதர் கல்விப் பரம்பரை யொன்று பழங்காலம் முதல் இருந்துவந்துள்ளது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆடவர்களது கல்வியினும் மிகத் தாழ்ந்த நிலையினை அது எய்தியிருந்தது." பெண்களது கல்லாமையென்னும் வழக்கம் மிக அண்மையான காலத்திலிருந்தே தொடங்கிற்று என்பது தெற்றென விளங்குகிறது. கல்வியெனும் மொழிக்குள்ள சங்கேதப் பொருளை நோக்கும்போது, இன்றைக்கு மாதரே நமது நாட்டில் மிகக் குறைந்த கல்வியை யுடையவர் எனினும், ஹார்டாக் கழகத்தார் கூறுகிறபடி, "பரம்பரையாக வந்த சம்பிரதாயங்களும், இயற்கையான புத்திக் கூர்மையும், திறமையும், உலக காரிய மியற்றுவதில் அனுபவமும், எத்தனையோ கல்வியறிவில்லாத மாதரை, வீட்டை ஆளுவதில் ஞானமும் வெற்றியும் பெற்ற நல்ல மனைவிமார்களாகவும்" தாய்மார்களாகவும் ஆக்கத் துணைபுரிகின்றன.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பழமையான கல்வி நிலையங்களிற் சில வாழ்ந்து

கொண்டிருந்தன; அவைகளில் அளிக்கப்பட்டு வந்த தாய்மொழிக் கல்வியை வங்காளத்திலும், பீகாரிலும் மீண்டும் உயிர் பெற்றெழச் செய்தல் நன்றென்று ஆதாம் என்பார் தமது அறிக்கையில் புகழ்ந்து பேசினர். ஆனல் மெக்காலே என்பார் எழுதிய புகழ்பெற்ற குறிப்பு (யாதாஸ்து) ஆங்கி லச் சார்புடையார் பழக்கத்தை ஆதரிப்பதாயிற்று. மேலும் ராஜாராம்மோஹனராய் என்பவரும் அவரது கல்விச் சாலையும் ஆங்கிலக் கல்வியை நிலைநாட்டுவதில் வெற்றியடைந்ததும் அதற்கு உத வியாயிற்று. இதற்குச் சற்று முன்பு 1832-ம் ஆண்டில் கீழ்த்தர நீதிமன்றங்களில் பெர்சியன் மொழிக்குப் பதிலாகத் தாய் மொழிகளை எற்படுத் தியது, ஒருவாறு தாய்மொழிக் கல்வியை வளர்க் கத் தூண்டுகோலாயிற்று. ஆனல் தாய்மொழி களின் வளர்ச்சி குன்றிவருதலே அவைகட்கு ஏற் பட்டிருந்த விதியானது போலும்; நாட்டில் ஆட்சி முறையை நடாத்துதற்குரிய மக்களின் தேவை நாளுக்கு நாள் பெருகிவந்தமையால், அதற்கு ஏற்ற வாறு ஆங்கிலக் கல்வியை நிலை நாட்ட அரசாங் கத்தார் முயன்றுவந்தனர். அதே முயற்சியில்

ஈடுபட்டிருந்த அதிகார வர்க்கத்தினரல்லாதாரது ஊக்கமும் அம்முயற்சியை வலியுறுத்தலாயிற்று.

நான்காம் வகுப்புவரையுள்ள கல்வி சர்க்காரால் வற்புறுத்தப்படாது, மக்களது பிரியத்தையே ஆதாரமாகக் கொள்ளல் வேண்டும் என்று சர்க்காரால் 1913-ம் ஆண்டில் தீர்மானிக்கப்பட்டது. அதன் பயனாக இந்நாட்டில் அம்முறைப்படி வலைப் பின்னல் போலப் பற்பல கல்விச் சாலைகள் தோன்றும் என்று நம்பப்பட்டது. ஆயினும், மக்களது பிரியத்தைப் பொறுத்துக் கல்வி வளர்தல் மிகத் தாமதமான முயற்சியாகும் என்பதும், ஒருவாறு அரசாங்கத்தாரது கட்டாயமும் அவசியமாகும் என்பதும் விரைவில் உணரப்பட்டன. கல்வித்துறை சம்பந்தமான முயற்சிகள் மஹாயுத்தத்தினால் அடங்கி நின்றுவிட்டன; மாண்ட்போர்டுச் சீர்திருத்தம் கிளம்பியபின்தான் மறுபடியும் கல்வி முயற்சிகள் விட்ட இடத்திலிருந்து தொடங்கப் பெற்றன. நமது நாட்டில் வர இருந்த குடியாட்சிக்கு ஏற்றவாறு நமது கல்வியைச் சீர்திருத்தம் செய்யும் அவசியம் இப்போது சிந்திக்கப்பட்டது; அதன் பயனாக சாட்லர் கழகத்தாரது அறிக்

கைபிறந்தது. அது பின்னர் 1920-ம் ஆண்டில் அரசாங்கத்தாரது தீர்மானத்தால் அங்கீகரிக்கப் பட்டது. கல்வித் துறைக்கு சுயேச்சையாற் கட்டாயம் எனும் முறையே கையாளத் தகுந்ததெனக் கொள்ளப்பட்டது; இதன்படி, முக்கியமான இராஜதானிகள் யாவும் கல்விமுறைச் சட்டங்களை நிறைவேற்றலாயின. ஆயினும் எந்த இராஜதானியிலும் கட்டாயக் கல்வியைப் பரப்புதலிலுள்ள கஷ்டம் இன்றும் தீர்ந்தபாடில்லை. நகராண்மைக் கழகத்தார்க்குக் கட்டாயக் கல்வியை வற்புறுத்துதற்குக் கொடுத்த அனுமதியை அவர்கள் மிகச் சிறிய அளவிற்கே பயன்படுத்தி யுள்ளார்கள். 1929-ம் ஆண்டில் எடுக்கப்பட்டுள்ள கணக்கின்படி, பஞ்சாப்பில் 57 நகராண்மைக் கழகத்தாரும், சென்னையில் 21 கழகத்தாரும் ஐக்கிய மாகாணங்களில் 25 கழகத்தாரும் கட்டாயக் கல்வியை ஏற்படுத்தியிருந்தார்கள். 1922 முதல் 27 வரையுள்ள ஐந்தாண்டுகட்குக் கல்வி சம்பந்தமான அறிக்கை வெளியிடப்பட்டபோது; பஞ்சாப்பைத் தவிர வேறு எந்த நாட்டிலும் கட்டாயக் கல்வி முன்னேற்றம் பிறர்க்கெடுத்துக் காட்டும் அளவிற்கு நிகழவில்லை யென்பது தெளிவாயிற்று. இத்தகைய நிலைமைக்குக்

கூறப்பட்ட மூன்று காரணங்களாவன:—(1) கிராமவாசிகட்குக் கட்டாயப் படுத்தும்கருத்துப் புதிதாயிருந்தது. (2) நகராண்மைக் கழகத்தார் கட்டாயப்படுத்தும் சட்டத்தைப் பயன்படுத்த மனமில்லாதவரானர். (3) பணமின்மையாலும் அது செய்ய இயலாது போயிற்று. ஆனல் கிராமங்களில் கட்டாயக்கல்வி முயற்சி பெரும் வெற்றியோடு நடைபெற்ற பஞ்சாப் தேசத்தில் கல்வித்துறைத் தலைவரான ஸர் ஜார்ஜ் ஆண்டெர்சன் என்பார், இந்தியாவின் நிலைமைக்குக் கல்வியை மிகச் சுருங்கிய பொருட் செலவில் மிகப் பயன்தரக்கூடிய முறையில் பரப்புதற்குக் கட்டாயமே உபாயம் என்று கூறினர்.

இந்தியாவில் ஆரம்பக் கல்வியின் சரித்திரத்தைக் கவனித்தால், கட்டாயப் படுத்தாது கல்வியைப் பொதுமக்களிடையே பரவச் செய்தல் நடைபெறக்கூடியதென நினைத்தல் இயலாது என்பது தெளிவாகும். ஆங்கில அரசாட்சிக்குப் புறம்பாகவுள்ள சில இடங்களில் இச் சோதனையை இந்தியாவில் நிகழ்த்திவந்தார்கள். நாலாவது வகுப்புவரை படித்தலைக் கட்டாயமாக்கி, அவ்வாயிலாக ஆரம்

பக் கல்வியை எங்கணும் பரப்புவதற்காகக் கோக்கலே என்பவரது மசோதா பிறக்கு முன் நெடு நாட்கு முன்னரே பரோடா நாடு இச்சோதனையை நிகழ்த்தியது; மற்ற நாடுகளோடு ஒப்பிடுங்கால் அது கல்வியறிவு மிகுந்துள்ள நாடாயிருப்பதில் இனி என்ன ஆச்சரியம்? நாலாவது வகுப்புவரை கல்வியை இலவசமாகவும், கட்டாயமாகவும் செய்வதற்காக ஒரு துணிவுகரமான சுறுசுறுப்பான முயற்சி செய்திருந்தால் இதனினும் மிக்க பயன் விளைந்திருக்கும் என்பது தெளிவாகின்றது. ஹார்டாக் கழகத்தார் இது விஷயத்தில் அழுத்திக் கூறுகிறார்.

பெண் கல்வியின் முன்னேற்றத்தைக் கருதும் போது, கட்டாயம் என்பது ஆண்பிள்ளைகளது கல்விக்கு மட்டும்தான் வேண்டப்படுவது என நாம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். மூன்று மாகாணங்களில்தான் பெண்கட்கும் கட்டாயப் படிப்பு ஏற்கும்; இங்கும் அது கட்டாயப் படுத்தப் படவில்லை. சென்னை மாகாணத்தில் ஆரம்பக்கல்வி, 1929-ம் ஆண்டில் கணக்கெடுத்திருக்கிறபடி, பெண்கட்கும் கட்டாயப்படுத்தப் பட்டது, சென்னைமா

நகரில் 4 பகுதிகட்கும் இரண்டு வேறு நகராண்மைக் கழகத்தார்க்குமே. 1897-ம் ஆண்டில் எடுத்த கணக்குப்படி, எழுதப் படிக்கத் தெரிந்த பெண்களோ படித்துக் கொண்டிருந்த பெண்களோ சென்னையில் 80-க்கு 1-ம், பம்பாயில் 130-க்கு 1-ம், வங்காளத்தில் 250-க்கு 1-ம், பஞ்சாபில் 330-க்கு 1-ம், வடமேற்கு மாகாணங்களில் 410-க்கு 1-ம், மத்திய மாகாணத்தில், 548-க்கு 1-ம் இருந்தார்கள். எம்மாகாணத்திலும் இன்றைக்கு 5 பெண்களில் ஒருவர்க்கு மேல் பள்ளிக்கூடம் செல்வதில்லையென்றும், சில மாகாணங்களில் 20, 25 பேரில் ஒருவராவது படிப்பதில்லையென்றும் ஹார்டாக் கழகத்தார் கணக்கிட்டிருக்கின்றனர்.

1921-ம் வருஷ ஜனத்தொகைக் கணக்குப்படி 10-வயதுக்கு மேற்பட்டவர் 2290 லெக்ஷம் ஜனங்களில் 230 லெக்ஷம் மட்டும் படித்தவர்கள்; படித்தவர்க்குள் 30 லெக்ஷம் பேர்தான் பெண்கள். இருபது வயதுக்கு மேற்பட்டவருள் 100-க்கு 18 பேர் ஆண்களும் 100-க்கு 2 பேர் பெண்களும் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள். 1931-ம் வருட ஜனத்தொகைக் கணக்குப்படி வந்த முடிவுகளும்

இதைப்போல் மனதிற்கு ஏமாற்றத்தை விளைவிக்கக் கூடியனவாகின்றன. இவ்வருடத்தில் ஜனத்தொகை நமது நாட்டில் 100-க்கு 10·6 அதிகரித்திருப்பதாகத் தெரிகிறது. ஆனல் படித்தவர்களது கணக்கைப் பார்க்கும்போது, கல்வி மிகத் தாமதமாகப் பரவியுள்ளது என்பதே காணப்படுகின்றது. இங்கிலாந்தில் ஒரு காகிதத்தை எழுதவோ படிக்கவோ தெரியாதவனைக் கண்டால் ஆச்சரியப்படுவாராம்; அவனது பெயரை எப்பொழுதும் நினைவில் வைத்துக் கொள்வாராம்; ஆனல் நமது நாட்டில் 100-க்கு 91 பேர் இந்நிலையில்தான் இருக்கிறார்கள்.

---

அத்தியாயம் 16

## கல்வியை விரைவாகப் பரவச் செய்தல்



பொது மக்களது கல்வி, இதுவரை கூறியவற்ருல் மிகவும் அவசியமானதன்ருே? கூடிய விரைவில் பொது மக்களது அறியாமையை ஒழிக்க ஒவ்வொரு முயற்சியையும் எடுத்துக் கொள்ளல் வேண்டும். முக்கியமாகக் கல்வியைக் கட்டாயமாக்கிக் கிராமப் பள்ளிக்கூடங்களை வளர்த்தல் வேண்டும். ஆரம்பக் கல்வி முறையை முழுதும் புதிதாகத் திருத்தியமைத்தல் வேண்டும். பள்ளிக்கூடங்களில் வழங்கப்படும் கல்விக்கு வாழ்க்கையில் பயன்படக்கூடிய ஒரு தன்மையை அளிக்கவேண்டும். அறியாமையை ஒழித்தற்பொருட்டு எளிய வழிகளைக் கையாளுதல் வேண்டும். ஒழுங்கான ஆரம்பப் பள்ளிக்கூடங்களில், உற்று நோக்கும் திறமையையும் கைத்தொழிலில் தேர்ச்சியையும் ஊட்டும் பொருட்டு, இப்போதிருப்பதை விட அனுபவ வழிக்குப் பயன்படக் கூடிய முறையில் கல்வி அளிக்கப்படுதல் வேண்டும். வாழ்க்கைக்குக் கல்வி

பயன்பட வேண்டும் என்ற நிலையினின்றும் நோக்குங்கால், இது மிகத் தீவிரமாக நம்மால் சிந்திக்கத் தக்க தொன்றாகும். கல்வித் துறையாளர் "கல்விக்காகவே கல்வி" என்னும் பழமொழியிலே கண்ணும் கருத்துமாய்த் திரிகின்றார். மிக்க முன்னேற்ற மடைந்த நாடுகளில் அப்பழமையான கருத்தைப் போற்றுதல் மிகப் பொருத்தமாகும் எனினும், நமது நாட்டைப் போன்ற ஒன்றில், பொதுமக்களை உயர்ந்த வாழ்க்கை வாழும்படி தூண்ட வேண்டிய அவசியம் உள்ள நாட்டில், அந்த மேன்மையான கருத்து வாழ்க்கையில் சிறிதும் பயன்படாமற் போகும்.

சிறுவர்கட்காக ஏற்படுத்தும் பள்ளிக்கூடங்களைப் பெருக்கிக் கொண்டு போவதனாலும் தொகைகளையும் சத வீதங்களையும் கணக்கிட்டுக் கொண்டு போவதனாலும் பொது மக்களது கல்வி யென்பது கைகூடாது. வயதானவர்கட்கும் சிறுவர்கட்குப் போல் கல்வி யளிக்கப்படல்வேண்டும். இது மிக்க வருத்தமில்லாமலும் ஒரு சிறிது அடக்கு முறையைப் பயன் படுத்துவதனாலும் செய்தல் இயலும். சட்டசபையின் அனுமதி அவசியமாகலாம்; ஆனால்

அதுவும் பெறத்தக்க தொன்றேயாம். வயதிற் பெரியோரும் ஐம்பதுவரை வயதுள்ள மனிதரும், தெரிந்தெடுக்கப்பட்ட ஆசிரியர்களால் குறிப்பிட்ட சில இடங்களில் நடத்தப்படும் பொதுக்காட்சி கட்கு வரும்படிக் கட்டாயப்படுத்தப்படல் வேண் டும். வயதானவர்கட்கு இரண்டு மூன்று வாரங்கட் குள் எழுதப் படிக்கவும், கணக்குச் செய்யவும் கற் றுக் கொடுப்பதற்குரிய கல்வி முறையைக் கண்டு பிடித்தல் வேண்டும். அக்கூட்டங்களில் தற்காலக் கருத்துக்களைப் புகட்டுவதற்காகவே தனியாகப் பிர சங்கங்களை நடைபெறச் செய்தல் வேண்டும். நமது நாட்டிற் பெரும்பாலார்க்கு இம்மாதிரியாகக் கல்வி கற்பித்துவிடக்கூடும். குழந்தைகட்கோ இப்போ துள்ள முறையைச் சீர்திருத்தியமைத்தல் வேண் டும். கல்வியைக் கட்டாயமாக்கல் வேண்டும்; சிறு வரது உள்ளத்து நலந்தரக்கூடிய, தற்கால, முன் னேற்றத்திற்குரிய கருத்துக்களை மனதிற் பதிப்பிக் கும்படிக் கல்வியை அமைத்தல் வேண்டும். கற்கும் காலத்தையும் அளவையும், மேல்தரக் கல்வியைப் பெற நினைப்பாரல்லாத மற்றவர்க்கு இரண்டு மூன்று வருடங்கட்கு மேற்பட்டு நீடிக்கச் செய்தல்

அவசியமில்லை. பொது மக்கள் சம்பந்தப்பட்ட வரை, சுருங்கிய பணச் செலவில் மிக்க பயன் தரக் கூடிய கல்வியை அளிப்பதே நமது நோக்கமாதல் வேண்டும்.

நமது நாட்டுப் பழமையான கல்வியைப் பரப்புதலை ஜனங்களது சொந்த ஏற்பாட்டுக்கே விட்டு விடல் வேண்டும். சர்க்கார்ப் பள்ளிக்கூடங்களும், சர்க்கார்க் கல்வியும், சிறுவர்க்குள்ளும் பெரியோர்க்குள்ளும் தற்காலக் கருத்துக்களைப் புகுத்துவதினால், ஜன ஸமூகத்தைப் புத்துயிர் பெற்றெழச் செய்யும் அவசியத்தை மட்டும் கவனித்துக் கொண்டு போதலே போதும். பொது ஜனங்கட்குப் பயிற்சியை அளித்தற்குத் தற்காலப் புத்தகசாலையைப் பயன்படுத்திக் கொள்ளலாம். சமாசாரப் பத்திரிகைகளையும் புத்தகங்களையும் மாதப் பத்திரிகைகளையும் சிறப்பாகத் தெரிந்தெடுத்துக் கிராமங்களில் பிரித்துக் கொடுக்கலாம்; கிராமப் புத்தக சாலைகளையும் வாசகசாலைகளையும் தொடங்குதற்கு வேண்டிய ஆதரவு கொடுக்கப்படலாம்.

கிராமத்துப் பொதுக் கட்டடங்களைக் கட்டுதலும் அவசியம்; இவைகள் பொதுக் கூட்டம் கூடு

தற்கும், வாசகசாலைகட்கும், அசையும் படக்காட்சிகளைக் காண்பித்தற்கும், நாடகங்களை நடித்தற்கும், பயிற்சியளிக்கும் முயற்சிகளை நடைபெறச் செய்வதற்கும் ஏற்ற இடங்களாமாறு பயன்படவேண்டும். தற்காலக் கருத்துக்களைப் போதித்தற்கு இக்கட்டடங்களையும் உபயோகித்துக் கொள்ள வேண்டும். இதனுல் ஊதியம் பெறவும் வழி ஏற்படும்; ஏனெனில், சிலசமயங்களில் மிக இனிய பயன்படத்தக்க நாடகங்களைக் காண வருவோரிடம் மிதமான கட்டணத்தையும் வசூலிக்கலாம். ஆனுல் கட்டணம் விதிக்கும் பொறுப்பைக் கிராமச் சங்கத்தார்வசமே ஒப்புவித்துவிடலாம். பாட்டுகள் மூலமாகக் கதை சொல்லுதலும், தற்காலக் கருத்துக்கள் அறியாமை யென்னும் இருளைப் போக்குவதற்காக ஸமூகத்தார் முன்பு பல இடங்களிலும் அக்கருத்துகளை அமைத்து இயற்றியுள்ள பாடல்களைப் பாடுதலும், நாம் கொண்ட கோரிக்கையை நிறைவேற்றத் துணையாகும்.

—

## அத்தியாயம் 17

## வெறுஞ் சீர்திருத்த முறைகளின் பயனின்மை

---

இதுகாறும் கூறப்பட்டுள்ள பரிகாரங்கள் மிக மிஞ்சிய கண்டிப்புடையனவாயும் ஒருக்கால் தலைகீழான தொரு புரட்சியை உண்டு பண்ணுவன வாயும் தோன்றலாம். ஆனல் உள்ளதை உரைக்கின், வேறொரு வழி இருப்பதாகத் தோன்றவில்லை. சாந்தப்படுத்தும் முறைகளும் சீர்திருத்த முறைகளும் இந்நாட்டில் வெகு காலமாக வறிதே கையாளப்பட்டுள்ளன. பிராம்மணரது வைதிக கிரியைகளை எதிர்த்துப் போராடிய புத்த மதத்தினரது பூசலும், முழுதும் தோல்வியுற்றது. பிற்காலத்தில் சீக்கிய மதம், ஆரிய ஸமாஜம், பிரம்மசமாஜம் முதலிய சீர்திருத்த இயக்கங்களும், விதவைகளின் மறுமணம் முதலிய தென்னிந்திய சீர்திருத்த இயக்கங்களும் பெரிதும் வெற்றி பெற இயலாது போயின. ஒரு சிறிய குன்றின் மீது இருப்புப் பாதை அமைத்தல் போன்ற ஒரு குற்றமற்ற நன்மையான யோசனையும் ஒரு வகுப்பினரால் பெரிதும் எதிர்க்கப்பட்

டது. இத்தகைய மனப்பான்மை குடிகொண்டுள்ள நிலைமையில், மிகச்சிறிய ஸமூகச் சீர்திருத்த முயற்சிக்கும் பலமான எதிர்ப்புக் கோஷம் கிளம்புவது உறுதியாகும். ஆகையால், ஜனஸமூகத்தை உள்ளூர அரித்துக்கொண்டிருக்கும் நச்சுப் புழுவை நீக்குதற்கு அவசரமும் அவசியமுமான எல்லா ஏற்பாடுகளையும் ஒரே தடவையாக வற்புறுத்துதலே உண்மையான பரிகாரமாகும்.

எதிர்ப்போ வந்தே தீரும். ஒவ்வொரு நாட்டிலும் மக்கள் தமது முன்னேற்ற நெறியில் அதையும் ஆண்மைத்தனமாக எதிர்த்து நிற்கத்தான் வேண்டியிருந்தது. மார்பி என்பார் கூறியபடியே, “சீர்திருத்தத்தை விரும்புவோர்க்குள் கிட்டத்தட்ட எல்லோரும் தமது உதாரகுணத்தோடெழும் ஊக்க முதிர்ச்சியில் ஓர் உண்மையை மறக்கும் இயல்பிற்கு ஆளாகின்றனர்; அது யாதெனில், அவர்களது கட்சியையே உலக முழுவதும் ஆதரிக்கத் தயாராயிருக்குமாயின், அவர்களது சீர்திருத்தங்கள் அப்போது தேவையில்லாமலே போய்விடும் என்பதே. சீர்திருத்தத்தை எதிர்ப்போர் எந்த அளவிற்கு மிக்க தொகையினராயும் தளராத உறுதியுடைய

ராயும் இருக்கின்றனரோ, அதேயளவிற்கு அதன் அவசியமும் நிச்சயமாக அவசரமாகின்றது என்பது ஒரு மிகக் கடினமான நிபந்தனையாகின்றது.''

சிசு மணத்தையும் குழந்தை மணத்தையும் கூசாது போற்றும் அளவுவரை செல்லும் ஒரு சிலரது அதாவது உணர்ச்சிவயப்பட்டஒரு சிலரது எதிர்ப்புகள், அடிவரை மாற்றும் யாதேனும் ஒரு பரிகாரத்தைத் தேடினாலொழிய அழிவது உறுதியென்னும் படியான ஒரு நிலையிலிருக்கும் ஒரு பெரிய ஸமூகத்தார் உய்வடைதற்கு, இடையூறாகக் குறுக்கிடும்படி இடங்கொடுத்தல் முறையல்ல. ஜாதியைப்பற்றியெழும் வேறுபாடுகள் ஒழிந்தே தீர வேண்டும். பிறப்பொன்றினாலேயே எவனும் தனக்கு ஒரு மேன்மையையோ மீள ஒண்ணாத தாழ்வையோ ஏறிட்டுக் கொள்ளக்கூடாது. இது ஒன்றுமட்டும் நடைபெறுமாகில், ஏனைய முன்னேற்றவழிகளெல்லாம் எளிதாகக் கைகூடும். இந்தியாவைப்போன்று அவ்வளவு பழமைவாய்ந்த மற்ற தேசங்களில் இத்தகைய நிகழ்ச்சி தோன்றவில்லை. அந்நாடுகளில் உள்ள மேல் வகுப்பினர் தாழ்ந்த வகுப்பினரோடு, மொத்தமாகக் கலந்து

விட்டனர். மக்கள் ஒன்ருகிவிட்டனர்; பிறப்பி ஞல் பெருமைப்படுத்திக்கொள்ளுதலோ சிறுமைப் படுத்திக்கொள்ளுதலோ அங்கே காணப்பட வில்லை; ஒவ்வொருவர்க்கும் தகுதி மிகுந்து உயர்ந்த நிலையடைய ஏராளமான சந்தர்ப்பம் உண்டு. ஒவ்வொருவரும் மனிதவர்க்கத்தினரில் ஒருவராகத் தம்மைப் பெருமையோடு கருதுவர்.

இவ்வாறு இந்தியாவைப்பற்றியாவது, அதி லும் இந்துவைப்பற்றிச் சிறப்பாகப் பேச முடி யுமா? இந்த ஸமூகத்தில் பிறந்தோமே என்று தமது விதியை நொந்து கொள்பவர் எத்தனை பேர்? தமக்கு ஓயாது அவமானத்தையும் இழிவையும் உண்டாக்குதற்கு ஏதுவாக அமையும் ஒரு வகுப் பினர் முழுதும் மறைந்துவிட வேண்டுமேயென்று மனங்கசிந்து துடிப்பவர் எத்தனை பேர்?

---

## அத்தியாயம் 18

## அமைப்பு முறை

---

மேலே செல்லுமுன் இதுவரை கூறிய யோசனைகளை அனுபவத்திற்கொண்டு வருவதற்காக யான் கருதியுள்ள அமைப்பு முறையைப்பற்றி ஒருவாறு விரித்துரைத்தல் அவசியமென நினைக்கிறேன். யான் முற்கூறியபடியே, கிராம முன்னேற்றப் பகுதியொன்றை ஏற்படுத்துதல் இன்றியமையாதது. தற்காலத்துள்ள தொழிலாளர் பகுதி தனது நோக்கத்தை நிறைவேற்றிவிட்டதென்றே நான் நம்புகிறேன். இன்னும் அடைதற்கு எஞ்சியிருப்பதை அப்புதிய பகுதியே இயற்றும்படி விட்டுவிடலாம். அப்பகுதி தாழ்த்தப்பட்ட வகுப்பினரது தேவைகளுள்பட எல்லாக் காரியங்களையும் கவனிக்கும் பொறுப்போடு தொழிலியற்றி வருதல் வேண்டும்.

மாகாணத்திலுள்ள ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒரு ஜில்லாக் காரியாலயம் ஒன்றை ஏற்படுத்தி, கிராம முன்னேற்றத்தின் துறைகள் பலவற்றை

யும் கைக்கொள்ளும் அதிகாரத்தை அதனிடம் ஒப்புவிக்க வேண்டும்; கிராமாந்தரங்களில் ஒவ்வொரு கிராமமும் அதற்கென ஒரு கிராம முன்னேற்றக் கழகம் ஒன்றை உடையதாக வேண்டும். எங்கெங்கே கிராமங்கள் சிறியவாயும், அவைகளின் வருவாய்கள் சுருங்கியும் இருக்குமோ அங்கே இரண்டு மூன்று கிராமங்களை ஒன்ருகத் தொகுத்து,அதை ஒரு கிராமமூலமாகவைத்துக்கொள்ளலாம்; ஆனல் எங்கே வேறு வழியில்லையோ அங்கே தான் இம்மாதிரி செய்யப்படல் வேண்டும். கிராமப் பஞ்சாயத்தார் கிராம முன்னேற்றக்கழகத்தாராகத் தொழிலியற்றுதற்கு ஏற்ற கருவிகளாவார். ஆனலும் இக்கழகங்கள் தமதுகடமைகளை ஒழுங்காக இயற்றிவருவதற்கு எவ்விதத்திலும் சட்டசபையின் அங்கீகாரம் அவசியமாகும்.

பணச் செலவிற்கோ, இதற்கெனத் தனியாக வரிவிதித்தல் ஒன்றே சமயத்திற்கேற்ற சிறந்த வழியாகும். ஆனல் அத்தகைய ஏற்பாடு பொது ஜனங்களாலே உடனே அங்கீகரிக்கப்படுமா என்பதும், அங்கீகரிக்கப்பட்டாலும் ஒவ்வொரு கிராமமூலத்தும் வசூலிக்கப்படும்தொகை அக்கிராமத்தின்

தேவைகளை அளிப்பதற்குப் போதியதாகுமா என்பதும் சிந்திக்க வேண்டியவைகளேயாம். ஆனால் கிராமவாசிகளது தேவைகளை நெடுங்காலமாகப் பூர்த்தி செய்யவில்லை என்பதையும், மிகப்பழமைக் காலம் முதலே அரசாங்கம் தனது வருமானத்திற் பெரும்பகுதியை நகரங்களிலும் பட்டணங்களிலும் அவைகளது நன்மைக்காகவே செலவிடுவதிற் கருத்தூன்றியிருந்துள்ளனர் என்பதையும் நோக்குங்கால், எல்லா வகைகளிலும் கிராமங்களிலிருந்து வசூலிக்கப்படும் வருமானத்தின் ஒரு பகுதியையாவது கிராம முன்னேற்றத்திற்காக அவைகட்குத் திரும்பக் கொடுத்துவிடவேண்டும் எனச்சொல்வது அளவுகடந்ததாகாது. சங்கடத்தை வெல்லுவதற்கு இதுவொன்றே வழியென்பதும் இனி இது பற்றிக் காலதாமதம் செய்தலும் தகாது என்பதும் எனது அபிப்பிராயம். இது போன்ற ஒரு ஏற்பாடுதான் கிராமங்கட்குப் பயன்தரும் அளவிற்கு உதவக்கூடிய ஒரு நிதியை அளிக்கும். பற்பல துறைகளில் வேலைசெய்யும் அரசியல் அதிகாரிகளும் கிராமங்களின் நிலைமையைச் சோதனைசெய்து முதன் முதலாக ஆராயவேண்டிய கணக்குகளைத் தயாரித்த

பின், அதைப் பொறுத்து ஒருகுறிப்பிட்ட வேலைத் திட்டம் வரைந்து கொள்ளவேண்டும்; கிராம முன்னேற்றத்திற்காக ஏற்பட்ட பகுதியார் தமக்குமுன் ஐந்துவருஷ வேலைத்திட்டத்தை அமைத்துக் கொண்டு, கண்டிப்பாக அதன்படி வேலைகளை இயற்றிவருதல் வேண்டும். ஐந்து வருஷங்கட்குப் பின் நிலைமையை மீண்டும் ஆராய்ந்து. பிற்காலத் திட்டமொன்றை விதித்துக்கொள்ளல் வேண்டும்.

இவ்வாறு அமைக்கப்படும் எல்லாமுறைகளிலும் எல்லாத்திட்டங்களிலும் பயிற்சியை உயர்த்தும் முயற்சியிலேயே சிறப்பாகக் கவனம் செலுத்தப்படல் வேண்டும்; ஏனெனில் இது செய்யப்பட்டாலொழிய நமது ஸமூகத்தின் நலத்தை வளர்த்தற்குப் பயன்படும் எந்தச் சீர்திருத்தமும் நிலையாக இருத்தல் இயலாது.



## அத்தியாயம் 19

## கிராமப் பொருளாக்க இயல்

---

கிராமப் பொருளாக்க இயல் மிகக்கடினமான ஒரு விஷயமாகும். இந்திய கிராமத்திற்கு முக்கிய ஆதாரம் விவசாயமே. கிராமவாசிகளிற் பெரும் பாலார் இத்தொழிலேயே சார்ந்து வாழ்கின்றனர். நகரங்களிலும் பட்டணங்களிலும் கைத்தொழில் கள் உயர்ந்த அளவிற்குப் பண்பட்டுவந்துள்ளன. எனினும் கிராமங்களில் அவை உயர்வையோ சீர் திருத்தத்தையோ அடையவில்லே. ஆனல் அடிக் கடி மாறிவரும் அரசியல் நிலைமை இருக்கும்வரை கைத்தொழில் வளர்ச்சி தொடர்பாக நிகழாது, பல தடவைகளிலும் விட்டு விட்டுத்தான் நிகழ்கின் றது. கிராம வளர்ச்சிக்காக ஒரு திட்டம் அமைக்கும் போது, பற்பல ஊர்களிலும் பழக்கத்திலிருக்கும் முக்கிய கைத்தொழில்களை மீண்டும் உயிர்பெற்றெ ழச் செய்வதிலேயே சிறப்பாகக் கவனம் செலுத் தப்படவேண்டும். கிராமக்கழகத்தார் கிராம முன் னேற்றப்பகுதியின் ஆதரவின்கீழ்த் தக்கதொழிற்

பயிற்சி நிலையங்களைப் புதிதாக ஏற்படுத்தலாம். இளைஞர்களை அங்கே பயிற்சிபெறும்படித் தூண்டலாம். சம்பளமும் பணஉதவியும் அவர்கட்கு அளித்தற் பொருட்டு ஓர் ஏற்பாடும் செய்யலாம். பயிற்சி பெறுவதற்காக மாணவர்களைப் பொறுக்கும்போது, ஜாதியைப் பற்றிய நினைவே வரக்கூடாது. தகுதி பற்றியே அவர்களைத் தேர்ந்தெடுத்தல் வேண்டும். ஜாதிமுறைமையினால் இளைஞர் தமக்கு ருசி இருந்தாலும் இராவிட்டாலும் குலத் தொழிலையே பயின்று வருவாரன்றோ? இவ்வாறு கட்டுப்படுத்தும் ஜாதிமுறையின் கொடுமைகளைத் தகர்த்தெறிவதற்கு இதுவும் ஓர் உபாயமாகும். கிராம முன்னேற்றப் பகுதியார் முக்கியமான கிராமப் பகுதிகளில் பொருட்காட்சிகள் நடைபெற ஏற்பாடு செய்து, அவ்வாயிலாகப் போதனை யளிப்பதோடு, கிராமக் கைத்தொழிலினால் உண்டாக்கப் பட்ட பொருள்களை விளம்பரமும் செய்யலாம்.

கிராம முன்னேற்றக் கழகத்தார் கைத் தொழிற் பகுதியாரிடமிருந்து புத்திமதியையும் போதனையையும் நாடிப்பெற வேண்டும்; ஆனால் கிராம வளர்ச்சிக் கழகத்தாரே கிராமக் கைத்

தொழில்களை விருத்தி பண்ணும் முழுப்பொறுப் பினையுடையவராவார். விவசாயம் சம்பந்தப்பட்ட மட்டிலோ எவ்வளவு விரிவாக நிலத்தைச் சாகுபடி செய்ய இயலுமோ, அந்த எல்லையை ஏறக்குறைய நாம் சேர்ந்தாய்விட்டது. மாசூலை அதிகப்படுத் தும் முயற்சிகளை மட்டும் இனிக் கையாள வேண் டும்; கழகத்தார் இதற்கு விவசாயப் பகுதியாளரது போதனையை நாடல் வேண்டும். இதுவரை செய்யப் பட்டு வந்துள்ள விவசாய அபிவிருத்தி சரியான தக்கமுறையில் நடைபெற்றுவந்துள்ளதா என் பதை அறிதலும் பெரிதும் அவசியமாகும். சமீப காலத்தில் நெல் சாகுபடி மிகவும் விருத்தியடைந்து வந்துள்ளது. இது ஸமூகத்தாரது உடல் நலத் திற்கு அனுகூலமாகுமோ என்பதையும் கருத இதுவே காலம் ஆகும். ஸமூகத்திற்கு இது மெய் யாகவே நன்மையளிக்க வில்லையென்பது அறியப் பட்டால் நெல்லை விட மிக்க சத்துள்ள ஓர் உண வுப் பொருளைப் பலரும் உபயோகப்படுத்தும்படிச் செய்தற்பொருட்டு, சாகுபடி செய்யப்படும் தானியங்களில் ஒரு திருப்தியான மாறுதல் உண்டு பண்ணுவதைக்குறித்துக் கவனம் செலுத்தப்படல்

வேண்டும். சத்தில்லாத மாமயம் (Starch) நிறைந்த அரிசி போன்ற உணவு உடலின் பலவீனத்தையும் நோய்க்காளாகும் இயல்பையும் உண்டுபண்ணிவிட்டது. விவசாயப் பகுதியார்,பொதுச் சுகாதாரப் பகுதியார் - இவ்விருவரது புத்திமதியையும் பெறுவதினல் நமக்கு அவசியமான கோரிக்கையை நிறைவேற்றிவிடலாம். இவ்விரு பகுதியாரும் ஒன்று சேர்ந்து சோதனைசெய்து கணக்கெடுத்து, கிராமக்கழகத்தார் முன்பு தமது முடிவுகளை எடுத்துக்காட்டி, பின் பற்றுதற்குரிய வழி இன்னதென்பதையும் குறிக்க வேண்டும்.

கூட்டுறவுக் கடன்பெறுதற்கும் சந்தைவியாபாரம் செய்தற்கும் சரக்குகளைப் பலவிடங்கட்கும் பரவச்செய்தற்கும் பல வசதிகள் இப்போதிருப்பதைவிட அதிகமாகக் கிடைக்குமானல், கிராமத்தார் விவசாயத்திலும் கைத்தொழிலிலும் முன்னேற்றமடையலாகும்.

---

## அத்தியாயம் 20

## முடிவுரை

---

எனது பிரயாணத்தின் முடிவை அணுகும் போது, ஈதனைத்தும் வறிதான முயற்சியன்றோ என்று நானே ஆச்சரியப்படுகிறேன். இப்போதுள்ள மனப்பான்மையில் ஒரு பெரும் மாற்றம் நிகழ்தல் இன்றியமையாததாகின்றது. இதற்கு அறிஞர் வழிகாட்டிச்செல்லல் வேண்டும்; பொது ஜனங்களும் அரசாங்கமும் துணிவோடு முன் செல்லத்தொடங்கவேண்டும். இருவரும் சமயத்துக்குத் தக்கபடி வேலை செய்யும் திறமையுடையரா? சீர்திருத்தச் செயல் இந்தியாவில் வெற்றிபெற்றதே இல்லை, கடுமையான ஒரு பெரும் மாறுதலை ஜனங்கள் எதிர்ப்பில்லாமலே பிரியத்தோடு அங்கீகரிப்பார்களா? அரசாங்கம் ஸர்வாதிகாரியின் மனப்பான்மையை ஏறிட்டுக்கொண்டு, இந்த நாட்டில் வாழும் பற்பல பழமை தழுவுவோரது குழப்பத்தையும் கூக்குரலையும் பொருட்படுத்தாது முற்கூறிய அவசியமான மாறுதலை உண்டுபண்ணுமா? நடக்கப்போவது யாது என்பதைப்பற்றிய சிந்த

னக்கு இருள்மூடிய காட்சியே தென்படுகின்றது; ஆயினும் நம்பிக்கை இன்னும் உள்ளது என்றே நான் உணர்கிறேன், மாறுதல் அவசியம் என்னும் உணர்ச்சி மெல்லமெல்லப் பொது மக்கட்குள் பலப்பட்டு வருகிறது. ஒழிவில்லா நம்பிக்கையோடு, யானே எனக்கு இட்டுக்கொண்ட இவ்வேலையை முடிக்கிறேன்; எனது எழுதுகோலும் முன்செல்ல மனமிலாது நின்றபின், இனி அதைக் கீழே வைத்துவிடுகிறேன்.



முற்றிற்று

---

Printed at the Excelsior Power Press Madura:—1939.

